# அகத்தியர் நூல் திரட்டு



சிறப்புக் கேண்மை பதிப்பாசிரியர்
டாக்டர். ச. அரங்கராசன்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 371

# அகத்தியர் நூல் திரட்டு

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்
டாக்டர் **ச. அரங்கராசன்** பி.ஐ.எம்.
சித்த மருத்துவ அலுவலர்
ஆரம்ப சுகாதார நிலையம்
மெலட்டூர்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்**
**தஞ்சாவூர்.**

2004

விலை : ரூ. 25

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | அகத்தியர் நூல்திரட்டு |
| பதிப்பாசிரியர் | : | டாக்டர் ச. அரங்கராசன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 371 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2004 |
| தாள் | : | TNPL 17.8 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 120 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | மருத்துவம் |
| விலை | : | ரூ. 25 |

இரண்டாம் பதிப்பின்

# வெளியீட்டாளர் முகவுரை

"அகத்தியர் நூல் திரட்டு" எனும் இந்நூல் அகத்தியர் பெயரால் வழங்கும் ஐந்து சிறு நூல்கள் இடம்பெற்றுள்ளன. அவை மூலிகை மர்மம், கும்மி, பச்சை 16, தர்க்கம், நாடி ஆகிய தலைப்புகளில் அகத்தியர் பெயரில் உள்ள சுவடிகளை ஆராய்ந்து அகத்தியர் நூல் திரட்டு என்ற பெயரில் இம்மருத்துவ நூல் இரண்டாம் பதிப்பாக வெளியிடப் படுகின்றது.

இந்நூலை சிறப்பான முறையில் உரை எழுதி, இதர நூல்களுடன் ஒப்பீடு செய்து, பதிப்பித்து வழங்கியுள்ள சித்தமருத்துவர் திரு. ச. அரங்கராசன் அவர்களுக்கு எனது உளமார்ந்த பாராட்டுக்களைத் தெரிவித்து மகிழ்கின்றேன்.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவனசெய்துள்ள மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்களின் நேர்முக உதவியாளர் (பொது) மற்றும் நூலக நிருவாக அலுவலர் திரு. வே. இலட்சுமணன், M. A.,

அவர்களுக்கும், நூலகர் திருமதி. K. இராமதிலகம் அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்டுத் தந்த நூலக அச்சகத்தாருக்கும் எனது பாராட்டுக்கள்.

இந்நூல் சித்தமருத்துவ ஆராய்ச்சியாளர்களுக்கும், பொதுமக்களுக்கும் பெரிதும் பயனுறும் என நம்புகிறேன்.

**சி. கோசலராமன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
18-3-2004

# வெளியீட்டாளர் முகவுரை

பயனுறு இலக்கிய நூல்களையும் மருத்துவ நூல்களையும் ஓலைச் சுவடிகளிலிருந்து பதிப்பித்து வெளியிடுகின்ற ஒப்பற்ற பணியினை ஆற்றிவருகின்ற சரசுவதி மகால் நூலகம், அப்பணியின் தொடர்ச்சியாகத் தற்பொழுது 'அகத்தியர் நூல் திரட்டு' என்னுந் தலைப்பிலான இம்மருத்துவ நூலை வெளியிடுகின்றது.

அகத்தியர் பெயரால் சரசுவதி மகால் நூலகத் தமிழ்த்துறையில் இடம் பெற்றுள்ள மருத்துவச் சுவடிகளில் ஐந்து சுவடிகளைத் தொகுத்துப் பதிப்பிக்கப்பட்டதே 'அகத்தியர் நூல்திரட்டு' என்னும் இந்நூலாகும்.

முதற்பதிப்பாக வெளிவரும் "அகத்தியர் நூல்திரட்டு" என்னும் இந்நூலில், அகத்தியர் கும்மி, அகத்தியர் தர்க்கம், அகத்தியர் பச்சை, அகத்தியர் மூலிகை மர்மம், அகத்தியர் நாடி, ஆகிய ஐந்து சிறுநூல்கள் அடங்கியுள்ளன.

இந்நூலினை உரையெழுதிச் சிறப்பான முறையில் பதிப்பித்து வழங்கியுள்ளார் மருத்துவர் திரு ச. அரங்கராசன் அவர்கள். அவருக்கு என் பாராட்டுகளைத் தெரிவித்து மகிழ்கின்றேன்.

இந்நூலின் கையெழுத்துப் பிரதியினை நுண்ணாய்வு செய்து வெளியிடப் பரிந்துரைத்த தமிழ்ப்பல்கலைக்கழகச் சுவடித்துறை இணைப்பேராசிரியர் முனைவர் வே.இரா.மாதவன் அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதி உதவியினை நல்கியுள்ள நடுவண் அரசுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் சிறப்பாக வெளிவர ஆவனசெய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. எம். உத்திராபதி அவர்களுக்கும், நூலகப் பதிப்பு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் எனது பாராட்டுகள்.

சிறப்பான முறையில் இந்நூலினை அச்சிட்டுத் தந்துள்ள 'டாப்லைன் கம்ப்யூட்டர்ஸ்' அச்சகத்தாருக்கு எனது நன்றி.

இந்நூல் சித்த மருத்துவ ஆர்வலர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும், பொதுமக்களுக்கும் பெரிதும் பயன்படுமென நம்புகின்றேன்.

**வி. கு. ஜெயக்கொடி,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்
இயக்குநர், சரசுவதி மகால் நூலகம்.

தேதி : 19-09.96
தஞ்சாவூர்

# அகத்தியர் நூல்திரட்டு

## பொருளடக்கம்





# AN APPEAL

Manuscripts on Palmleaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S. S. M. Library, Thanjavur.

The Manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar King of Tanjore, **Rajah Serfoji,** has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world famous **"Sarasvati Mahal Library".** It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR AND DIRECTOR**
**Sarasvati Mahal Library,**
**Thanjavur.**

# பதிப்பாசிரியர் முன்னுரை

சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள ஐந்து சிறு சுவடிகள் முறையே எண் 179, 185(ஆ), 192, 224, 225 ஆகும். மூலிகை மர்மம், கும்மி, பச்சை 16, தர்க்கம், நாடி ஆகிய தலைப்புகளில் அகத்தியர் பெயரில் உள்ளன. இவற்றை பதிப்பிக்கக் கருதி அகத்தியர் நூல் திரட்டு என்ற பெயரில் திரட்டினேன். இவற்றில் பச்சை 16, தர்க்கம், நாடி என்பன பதிப்பாகிஉள்ளன.

**சித்தர்கள் வரலாறு**

சித்தன் என்ற சொல்லானது சிலப்பதிகாரத்திலேயே முதன் முதலில் கையாளப்படுகின்றது. கி. மு. 3ஆம் நூற்றாண்டில் தமிழகம் போந்த சமணர்கள் "பஞ்ச பரமேட்டிகள்" என்ற ஐவரை வணங்கி வந்தனர். சமணர்கள், இந்து சமயத்தில் சேர்ந்தபோது, சித்தர்கள் வழிபாடும், வணக்கமும் நுழைந்திருத்தல் கூடும். சமணர்கள் கல்விகற்கும் பொழுது, சித்தர்களுக்கு வணக்கம் செய்வது மரபாகும்.[1] சமணர்களின் அடிப்படையான கொள்கைகள் 1. உணவளித்தல் 2. காத்தல் 3. கல்வி போதித்தல் 4. மருத்துவம் செய்தல் ஆகியனவாகும்.

சித்தர் மரபானது திருமூலர் காலந்தொட்டே துவங்குகின்றது. கி. பி. 5ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட திருமந்திரத்தில் அகத்தியர் வரலாறு 'அகத்தியம்' என்ற தலைப்பில் உள்ளது.

கி. பி. 14ஆம் நூற்றாண்டில் சித்தர்கள் பலராகவும் பின்னர் பதினெட்டுச்சித்தர்கள் எனவும் சித்தர்களுக்கு வணக்கம் கூறும் மரபும் சித்தமருத்துவ நூல்களில் காணப்படுகின்றன. சித்தன் என்பவன் அகத்தியரின் மகன்.[2] சித்தன் என்பது முருகனின் பெயர் எனவும்,[3] பழனியின் பெயர் சித்தன் வாழ்வு எனவும் கூறப்படுகின்றது. சமணர்கள் வாழ்ந்த இடங்கள்[4] சித்தமல்லி, சுத்தமல்லி எனப்படும்.

சித்தர்களின் மரபானது தெளிவான முறையில் கூறப்படவில்லை. சங்கம் பற்றிய செய்திகள் இறையனார் களவியலில் உள்ளது போன்றே சித்த மருத்துவத்திலும் உள்ளது. சிவபெருமான், பார்வதி, நந்தி என்று தொடங்கி அகத்தியர், புலத்தியர், தேரையர், யூகி[5] என்று கூறப்படுகின்றன. அகத்தியர் நூல்களில் முரண்பாடான கருத்துகள் உள்ளன. எனவே சித்த மருத்துவ நூல்களில் உள்ள அகத்தியர்கள் பலராதல் கூடும். இவற்றில் காலத்தால் முற்பட்ட அகத்தியர், அவரது வரலாறு என்பன ஆய்வுக்குரியவையாகும். வட புலத்தில் நடைபெற்ற மாநாட்டிற்கு அகத்தியர் இங்கிருந்து சென்று கலந்து கொண்டதாகச் சரகர் மருத்துவ நூலில் உள்ளதும் ஆய்வுக்குரிய ஒன்றாகும். அகத்தியரின் பெயரில் உள்ள நூற்கருத்துகளைத் திரட்டி ஆய்வு செய்தல் வேண்டும். சிவபெருமான் நந்திக்குக் கூற, நந்தி மூலமாக அகத்தியர் அறிந்து கொண்டு சித்த மருத்துவத்தைப் பரப்பியதாகப் பிற்கால மருத்துவ நூல்கள் கூறுகின்றன. ஆயின் சித்த மருத்துவம் அகத்தியரால் செய்யப்பட்டதாகத் தமிழ் இலக்கியத்தில் சான்றுகள் இல்லை. இவற்றை எல்லாம் ஆய்வு செய்ய வேண்டி உள்ளது.

சங்க காலத்தில் கூறப்பட்ட மலைவளம் பற்றிய செய்திகளே மருத்துவத்தில் 'மலை வாகடம்' என்ற நூலாக மலர்ந்தது. சிற்றிலக்கியங்களில் மலைவளமும், தாவர வகைகளும் கூறப்பட்டுள்ளன.சித்த மருத்துவத்தில் காலங்கி நாதரின் கொல்லிமலை பற்றிய நூலும் கோரக்கரின் மலை வாகடமும் இன்றும் வழக்கில் உள்ளன. பேரூர் புராணத்தில் வரும் சில படலங்களில் காணப்படும் செய்திகள் கோரக்கரின் மலை வாகடத்தை ஒத்துள்ளன. அகராதிகளும் மூலிகைகளை விளக்கமாகக் கூற முன்வந்துள்ளன. நிகண்டுகள், அகராதிகளைப் பற்றிய விளக்கமான சித்த மருத்துவ நூல் வெளிவர வேண்டியது தேவையான ஒன்றாகும்.

'மூலிகை மர்மம்' என்ற நூலில் போகரின் நிகண்டிலுள்ள பாடல்கள் இடம்பெறுகின்றன. மூலிகை மர்மத்திலிருந்து இப்பாடல்கள் போகர் நிகண்டில் சேர்க்கப்பட்டதா? அன்றிப்

போகரின் பாடல்கள் மூலிகை மர்மத்தில் சேர்க்கப்பட்டதா? என்ற ஆய்வும் தேவைப்படுகின்றது. அகத்தியர் கும்மியில் இரதிதேவி, சித்தமருத்துவம் பற்றிய கருத்துக்களை உலகில் உள்ள மக்களுக்குக் கூறுவது போன்று அமைந்துள்ளது வேறு சித்த மருத்துவ நூல்களில் இல்லாத ஒன்றாகும். ஊர்வசி வைத்திய சிட்சாவைப் போன்று இந்நூல் உள்ளது. எது காலத்தால் முந்தையது என்பதை ஆய்வு செய்தல் வேண்டும். மூலிகைகள் பற்றிய செய்திகள் அனைத்தையும், ஓரளவு அட்டவணைப்படுத்திப் பொதுவியல் என்ற பிரிவில் சேர்த்துள்ளேன். இதனால் மூலிகைமர்மம் என்ற நூலுடன் ஒப்பீடு செய்ய வாய்ப்புள்ளது.

இப்பதிப்பு நூலில் அகத்தியர் பெயரால் வழங்கும் ஐந்து சிறு நூல்கள் இடம் பெற்றுள்ளன. முதலில் இடம் பெற்றுள்ள 'அகத்தியர் கும்மி' என்ற நூலுக்கும், இறுதியில் இடம் பெற்றுள்ள 'அகத்தியர் நாடி' என்ற நூலுக்கும் பாடபேத குறிப்புகளைத் தரவில்லை. நூலினுள் இரண்டாவதாகவும், மூன்றாவதாகவும் இடம் பெற்றுள்ள 'அகத்தியர் வைத்திய தர்க்கம் - 25' என்னும் நூலுக்கும் 'அகத்தியர் பச்சை 16' எனும் நூலுக்கும் சிதம்பர முதலியார் பதிப்பித்த' அகத்தியர் வைத்திய சில்லரைக் கோவை' என்னும் அச்சு நூலின் துணைகொண்டு பாடபேதங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இந்நூலினுள் 4 ஆவதாக இடம்பெற்றுள்ள 'அகத்தியர் மூலிகை மர்மம்' என்னும் நூலுக்குச் சிறுமணவூர் முனுசாமி முதலியார் பதிப்பித்த 'விஷவைத்திய சிந்தாமணி' என்னும் அச்சுநூலின் துணைகொண்டு பாடபேதங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இப்பாடபேதக் குறிப்புகள், அந்தந்த நூல்களின் பாடல்களுக்குக் கீழே தரப்பட்டுள்ளன.

இந்நூலைப் பதிப்பிக்க அனுமதி தந்த முன்னாள் மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூல்நிலைய இயக்குநர் உயர்திரு தி. சண்முகராஜேஸ்வரன் இ.ஆ.ப. அவர்களுக்கும், தற்போது இந்நூலுக்கான வெளியீட்டாளர் முகவுரையை வழங்கி நூல் வெளிவர ஆவன செய்துள்ள தஞ்சை மாவட்ட

ஆட்சித்தலைவர் மற்றும் நூலக இயக்குநர் உயர்திரு வி. கு. ஜெயக்கொடி அவர்களுக்கும், இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவன செய்துள்ள நூலக நிருவாக அலுவலர் திரு. எம். உத்திராபதி அவர்களுக்கும், சரசுவதி மகால் நூலக பதிப்பு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் எம்.ஏ.எம்.எல்.ஐ.எஸ்., அவர்களுக்கும், செம்மையுற நூல் அமையக்காரணமாகத் துணைநின்ற தமிழ்ப்பல்கலைக்கழகச் சித்த மருத்துவத் துறையின் தலைவர் இணைப்பேராசிரியர் டாக்டர் எஸ். பிரேமா எம். டி. அவர்களுக்கும், இந்நூற்கான கையெழுத்துப் பிரதியை நுண்ணாய்வு செய்துதந்த முனைவர், திரு. வே. இரா. மாதவன், முதுநிலை விரிவுரையாளர், தமிழ்ப்பல்கலைக்கழகம் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும். சித்த மருத்துவ நூல்களை ஆய்வு செய்யும் ஆய்வாளர்களுக்கும், போற்றும் புரவலர் பெருமக்களுக்கும் என்னுடைய பணிவான வணக்கங்கள். வழக்கம் போல் இந்நூலை வாங்கி ஆதரிக்கக் கேட்டுக்கொள்கிறேன். மூலிகைகளின் பயன்பாட்டை இம்ப்க்காப்ஸ், டாம்கால், போன்ற மருந்து செய்நிலையங்கள் கண்டறியக் கேட்டுக்கொள்ளுகிறேன். நூலைச் சிறப்பாக அச்சிட்டுள்ள டாப்லைன் கணிப்பொறி அச்சகத்திற்கும் என் நன்றி உரித்தாகின்றது.

அன்பன்,

ச. ரங்கராசன்

1-8-96



# நூலாசிரியர் வரலாறு

அகத்தியர் பெயரில் பல்வேறு சித்த மருத்துவ நூல்கள் உள்ளன. அகத்தியர்கள் பலர் ஆவர், என்பதை அவர்கள் படைத்த நூல்களில் வேறுபாடுகள் உள்ளதைக் கொண்டறியலாம். அகத்தியர் பெயரிட்டது அவர் மருத்துவ முறைகள், அவர் அறிவுறுத்திய நன்முறையாய் வழிவழியாய்க் கேட்கப்பட்டு மருந்தும் பயன்பெற்ற காரணத்தால் என்று துணியலாகும். இவற்றின் உண்மை அகத்தியர் பரிபாஷை முதலிய நூல்களில் காணலாம்.[6]

"பெருந்திரட்டு, ஆயுர்வேத பாசியம், விதிநூல், 3 வகைக்காண்டம், வைத்திய சிந்தாமணி, செந்தூரம் 300, மணி 4000, சிவசாலம், சத்திச் சாலம், சண்முக சாலம், வைத்தியக் கண்ணாடி, வைத்திய ரத்தினாகரம், வைத்தியம் 1500, வைத்தியம் 1600, கர்மவிபாகம், கரிசல், பற்பம் 200, தண்டகம், பட்சணி, நாடி சூத்திரங்கள்"[7] என்ற நூல்கள் அகத்தியரின் பெயரில் வழங்கப்பட்டுள்ளன. "முத்தமிழைக் கொண்டதாக அகத்தியர் கூறப்படுகின்றார். 1. மறைத்தமிழ் 2. வழக்குத்தமிழ் 3. செய்யுள் தமிழ். அகத்தியரின் மறுபெயர், தட்சிணாமூர்த்தி. இது இவர் பாடிய "தட்சிண மூர்த்தி குருமுகம் 100" என்ற நூலால் வெளியாகின்றது.[8] இது போன்றே வைத்தியக் கும்மி, குணவாகடம், வைத்திய சாரம், நயனசாரம், அவிழ்தசாரம், சிந்தூரமஞ்சரி, அமுதக் கலை ஞானம், பஞ்ச காவிய நிகண்டு, கன்ம காண்டம், பூரண சூத்திரம், சங்குசுத்தி, அட்டகம் என்ற நூற்பட்டியலும் உள்ளது.[9] போகர் 7000 என்ற நூலில் அகத்தியரின் நூல்கள் சொல்லப்பட்டுள்ளன. அவைகள், அகத்தியர் 4 காண்டம், அகத்தியர் கருமானம், பன்னிரண்டு காண்டம், 12000, 100, 600 பஞ்ச காவிய நிகண்டு 800, சௌமியம், வேதாந்தம், பலதிரட்டுக் கோவை சாலம், போகர் அகத்தியரை ஆசிரியராகக் குறிப்பிடுகின்றார்.

கொண்டேனே போகர் ஏழாயி ரந்தான்
குருவான அகத்தியனார் காவி யந்தான்
சண்டமாருதம் பன்னீ ராயி ரந்தான்
சட்டமுடன் மணிநாலா யிரமுந்தான்
பண்டான சதுர்காண்டம் நாலாயி ரந்தான்
பாங்கான கருமமிந்தக் காண்டந் தானும்
உண்டான பன்னீராயிரந் தானப்பா
உத்தமனே நாலிபன்னீராயிரந்தானே"

அகத்தியரின் 12000 என்ற நூலில் 5000 பாடல்கள் அச்சிடப்பட்டுள்ளன. கிடைக்கும் மருத்துவ நூல்களில் செம்பாதியளவு அகத்தியரின் பெயரிலேயே உள்ளன. அகத்தியரின் பிறப்பு வேளாண்குலம் என்பதாகப் போகர் 7000 என்ற நூலில் உள்ளது.

சரக சம்கிதை என்ற நூலில் அகத்தியர் குறிப்பிடப்படுகின்றார். அவர் மருத்துவ மாநாட்டில் பேராளராகக் கலந்து கொண்டார் என்றும் மருத்துவத்தை எட்டுப் பிரிவுகளாகப் பிரித்து மாநாட்டில் உரையாற்றினார்[10] என்றும் கூறப்படுகின்றது.



# அகத்தியர் வழிபாடு

அகத்தியர் வழிபாடு தமிழகத்திலும், வேறு பல இடங்களிலும் பரவலாக உள்ளது. அகத்தியருக்கு வட ஆர்க்காடு மாவட்டத்தில் புத்தூரிலும் தஞ்சை மாவட்டத்தில் அகத்தியன் பள்ளியிலும் காஞ்சி கைலாச நாதர் கோவிலிலும் திருவுருவம் உள்ளது. காஞ்சி கைலாசநாதர் கோவிலில் உள்ள அகத்தியர் கோவிலே முதன் முதலாகக் கட்டப்பட்டதாகத்[11] திரு. டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் கருதுகின்றார். பல்லவர்கள் காலத்திலேயே சித்தர்களுக்கான கோவில்கள் எழுப்பும் முறை துவங்கியதாகக் கொள்ளலாம். பிற்காலத்தில் 18 சித்தர்களுக்கும் கோவில்கள் கட்டப்பட்டன. திருப்புல்லாணியில்[12] உள்ள அகத்தியரை வழிபடக் காலரா நோயானது தீருமாம்.

அகத்தியரால் ‘வர்மக்கலை’யானது ஏற்படுத்தப் பட்டதாகக் கூறுகின்றனர். எனவே வர்மக்கலைப் பயிற்சிக்கு முன் அகத்தியருக்கு வணக்கம் செய்கின்றனர். இது ‘அகத்தியர் வந்தனம்’[13] என்றழைக்கப்படுகின்றது.

அகத்தியர்களின் கோவில்கள் மற்றும் வழிபாடுகள் பற்றிய ஆய்வு சித்த மருத்துவர்களால் செய்யப்படுதல் வேண்டும்.



# 1. அகத்தியர் கும்மி

## *நூலமைப்பும் வரலாறும்*

அகத்தியர் கும்மி என்ற பெயரில் சில சித்த மருத்துவ நூல்கள் வெளியாகி உள்ளன. எனினும் இந்நூல் அவைகளிலிருந்து மாறுபட்ட ஒன்றாகும். இந்நூல் இதுவரை பதிப்பாக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இதற்கான உரை எழுதப்படவில்லை. எனவே பதிப்பாசிரியரால் இதற்கு உரை எழுதப்பட்டுள்ளது.

காப்புச் செய்யுளானது விநாயகரை வணங்குவதிலிருந்து துவங்குகின்றது. இரதிதேவி, சிவபெருமானை வழிபட்டு, அவர் அருளால் நந்திதேவர் மூலமாக இம்மருத்துவ நூலை அறிந்துகொண்டாள். இரதிதேவி பெண்களுக்கு இம்மருத்துவ நூலை எடுத்துக்கூறுகின்றாள். இது கும்மி வடிவில், பாடல்களைப் பாடும் வகையில் உள்ளது. நாட்டுப்புறக் கலையின் தாக்கம் காணப்படுகிறது.

பெண்கள் மகப்பேறு காலத்தில் உண்ண வேண்டிய மருந்து செய்முறைகளைப் பற்றி விளக்குகின்றது. 44 வகையான மருந்து செய்முறைகளை இந்நூல் கூறுவதாக உள்ளது. ஆயின் முழுமையான வடிவில் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. பெண்ணை முன்நிறுத்திக் கருத்துக்களை இந்நூலாசிரியர் கூறுகின்றார்.அகத்தியர் கும்மி என்ற தலைப்பு இருப்பினும் அகத்தியர் பற்றிய குறிப்புகள் இந்நூலில் காணப்பெறவில்லை. இந்நூலின் சிறப்பு, இரதிதேவி கூறியதான சித்த மருத்துவ நூல் இதுவரை காணப்படவில்லை. ஊர்வசி என்ற தெய்வ மங்கையின் பெயரால் வைத்திய சிட்கா" I,II நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூலானது இரசவாதம் பற்றி எடுத்துரைக்கின்றது.

இந்நூல் "இலட்டு" என்ற உணவுப்பொருளைப்பற்றியும் கூறுகின்றது. இலட்டு என்பது இன்றும் வழக்கிலுள்ள இனிப்புப்பொருளாகும். எனவே மருத்துவ இலட்டு முறையையும் அறிவிப்பது உணவு செய்முறைகள் மீது பற்றுள்ளவர்களும் அறிந்துகொள்ள வாய்ப்பாகும்.

# அகத்தியர் கும்மி

1. கும்மியடி பெண்ணே கும்மியடி
கொங்கை குலுங்கவே கும்மியடி
நன்மை விநாயகன் பாதத்தைப் போற்றியே
நாடிக் கும்மி அடியுங்கடி
புகழ்ந்தோடிக் கும்மி யடியுங்கடி.

2. ஓடி மன்மதனைப் புகழ்ந்து, ரதி
உண்மையதாக நன்மையுடன்
கோடிக்காலம் பூசை, செய்தந்த
கொற்றவனின் மனம் ஒத்திடவே பின்னும்
நந்தியவன் பாத முத்தியிட்டான்.

3. முத்தியிட்டான் வெகு மோகமுடன்
முன்னின்றி இருகையும் கூப்பிவிட்டு
நந்தி யடியோன்மேல் கிருபைசெய்து
எந்தன் நாயகனே மனமுத்திடுவீர்
வெகு தாயகமாய் மொழி சாற்றிடுவீர்.

4. தாயகமாய் புவியின் வாழுகின்ற
தையலார்கள் பிரசவித்தால்
நேயமுடன் கருக்கோளரையில் வாயு
நீக்கு அவிழ்தமேயுரைப்பீர் எனஅப்
போக்கு முறைதனைத் தான்உரைப்பீர்.

5. தானுரைப்பீர் எனும் தையலுக்குச்
சாற்றிட வேண்டுமென்றே நினைத்து
வாணி தங்கையைப் போற்றி யுரைத்திட
வாழ்த்தி தன் நாத்தியைப் போற்றி செய்து
வெகு நேர்த்தியாய் வெகு தோத்திரமாய்

6. தோத்திரமே செய்து கேட்கையிலே அந்தத்
தோகை தன் நாயகனைக் கேட்டுரைப்பாள்
நேர்த்தியதாய் நாற்பத்தைந்து அவுடதம்
நிச்சயமாகவே சொல்லுகிறேன் இது
உச்சிதமாய்த் தோழிப் பெண்ணே.

7. சொல்லு இலவம் பிசின் ஒருசேர்
நாழி வெந்தயம், துத்தி, கடலையும்
நல்ல சமுத்திராப்பச்சையுடன் அதன்
சொல்லு மேலங் கிராம்புடனே.

8. பூவுடனே ஏலமும் சாலா மிசிரிப்
போற்று மதுரம் சிலாசத்துடன்
தாவிய கல்மதம் கல்நார் நாகப்பூ
தன்னுடனே அக்காரம் கண்டதிப்பிலி அதன்
பின்னோடு ஆவாரையும் வாகைப் பிசின்.

9. பிசினும் வகைக்கு அரைப் பலமாம்
அதன் பின்னும் தலக்காய் சிவகரந்தை
நிசமான சோம்புடன் பூனைக் காலிவித்து
நின்றிடும் மேகக் கரந்தை விதை இதில்
ஒன்றிடு நத்தையின் சூரிவித்தே.

10. வித்துடனே பலம் ஒன்றொடு நிலைரோசனை
கேசா கால் பலமாம்
பத்துப்பனை தண்ணீர் விட்டபின் முருங்கையும்
அத்துட வித்து, நீர் முள்ளி அதி
ஒத்த கொண்ட சின்னி தன் கிழங்கே.

11. தன்னுடன் தானியும் கொட்டிக் கந்தம்
தாங்கு பேரீஞ்சும் இரண்டு பலம்
மினனிய கசகசா ஒன்றதே சேர்த்தும்
விட்டிடு சீனியும் மூன்று சேர் அதில்
வட்டமாய்க் கொப்பரை ஐந்துடனே.

12. ஐந்துடனே பசுவிட நெய் அதுவும் அச்
சேர் மூன்று அரைச் சேர் தேன்
நஞ்சகத்தி இதைப் பாகு செய்து நீ
நாட்டிடு கொப்பரைத் தூளையுமே அதின்
மேலிடு மற்ற மருந்ததுவே.

13. இட்டுக் கிளறியே லாடு செய்து
ஏந்துழை மார் கறுத்தால்
பெற்ற வயிற்றில் வியாதி எல்லாம் அறும் மன
உள்ளத்து நோயை அகற்றிடுமே.

14. அகற்றிடும் என்றுதான் பேசுகின்ற
அன்பான சூதக வாயுடன்
நகத்திய ஈளை இளைப்பு பேதியும்
நாடாது, வாதம் இருமலுடன் இன்னம்
கோடான கோடி பிணி அகலுமே.

15. பிணியறு என்று தான் பேசுகின்ற
பெண்ணினைப் போற்றிச் சுதனுக்கீயத்
துணிவாய் வணங்கி, தன் தோகைக்கு உரைத்திடச்
சொன்னான், முனிக்கு என்று ஓதுங்கடி நீங்கள்
நன்றாகவே கும்மி பாடுங்கடி.

★★★★★

# அகத்தியர் கும்மி - உரை

பெண்களே, கைகொட்டி, மகிழ்ச்சியுடன் கும்மி அடியுங்கள். நன்மை தரும் கணபதியின் திருவடிகளை வணங்கி, கும்மியடியுங்கள். கோடிக்கணக்கான ஆண்டுகள் சிவபெருமானை வணங்கி, இரதிதேவி வழிபட்டாள். இரதிதேவியின் கணவன் மன்மதன் சிவபெருமானின் நெற்றிக்கண்ணால் அழிந்தான் என்பது புராணம் தரும் செய்தியாகும். அவனை உயிர்ப்பிக்க இரதிதேவி முயன்று, அவனை அடைந்தாள். சிவபெருமான் மனம்மாறி, இரதிதேவியின்வழிபாட்டை ஏற்றுக்கொண்டு, அருள் புரிகின்றான். அவளுக்கு நந்தி பெருமான் மூலம் மகப்பேறு பற்றிய செய்திகளைக் கூறுகின்றார். நந்திபெருமான் மூலம் மகப்பேறு பற்றிய உண்மைகளை இரதி தெரிந்து கொண்டு, அதனைப் பாடல்கள் மூலம் உலகத்துப் பெண்களுக்குக் கூறுவதாக இந்நூல் உள்ளது.

பூமியைத் தாய்வீடாகக் கொண்டு வாழும் பெண்கள், மகப்பேறுக்குப் பின்னர் கருப்பையில் உள்ள காற்றை நீக்கும் வழியைக் கூறுகின்றேன் கேட்பாயாக எனச் சிவபெருமான் அருள, இரதிதேவி நந்திபெருமானால் செவிமடுக்கின்றாள். சித்தமருத்துவம் நந்தியால் தோன்றியதாக மருத்துவ வரலாறு உள்ளது.

சிவபெருமான் கலைமகளைப் போற்றிப் புகழ்கின்றார். கலைமகள் கணவனான பிரம்ம தேவரை மருத்துவம் பற்றிக்கேட்க, பிரம்மதேவர் 44 வகை மருந்துகளைப் பற்றிய நூலைத் தருகின்றார். இங்கு வாணி என்பது கலைமகளைக் குறிக்கும். கலைமகள் என்பது சரஸ்வதி, இது வல்லாரையை மருத்துவத்தில் குறிக்கும். பிரம்ம தேவரின் உடன்பிறந்தாள் பிரமி, பிரமி என்பது மருத்துவ மூலிகையாகும். வாணி என்ற பெயரால் வல்லாரைக் கீரையையும் பிரம்மதேவரின் உடன்பிறப்பாகப் பிரமி மூலிகையையும் குறிக்கும் இலக்கிய

நயம் சுவைக்கத் தக்க ஒன்றாகும். கலைமகளின் மருமகள் இரதிதேவியாவாள். சரசுவதி என்ற வல்லாரை மூளையைப் பலப்படுத்தி, அறிவாற்றலைப் பெருக்கும் தன்மையது ஆகும்.

செய்முறை

| | |
|---|---|
| 1. இலவம் பிசின் | 1 சேர் (280 கி) |
| 2. வெந்தயம் | நாழி (1.3 லிட்டர்) |
| 3. துத்தி | |
| 4. கடலை | |
| 5. சமுத்திராப்பச்சை | வகைக்கு 1/2 பலம் (17.5 கி) |
| 6. ஏலம் (சிறு) | ,, |
| 7. கிராம்பு | ,, |
| 8. ஏலம் | ,, |
| 9. சாலாமிசிரி | ,, |
| 10. அதிமதுரம் | ,, |
| 11. சிலாசத்து | ,, |
| 12. கல்மதம் | ,, |
| 13. கல்நார் | ,, |
| 14. சிறுநாகப்பூ | ,, |
| 15. அக்ரகாரம் | ,, |
| 16 கண்டதிப்பிலி | ,, |
| 17. ஆவாரை | ,, |
| 18. வாகைப்பிசின் | ,, |
| 19. தலக்காய்[14] | 1 பலம் (35 கி.) |
| 20. சிவகரந்தை | ,, |
| 21. சோம்பு | ,, |

| | |
|---|---|
| 22. பூனைக்காலி விதை | ,, |
| 23. கரந்தை விதை | ,, |
| 24. நத்தை சூரி விதை | 1 பலம் (35 கி.) |
| 25. கோரோசனை | 1/4 பலம் (8.75) |
| 26. கேசா[15] | |
| 27. பனை | |
| 28. தண்ணீர்விட்டான்கிழங்கு | |
| 29. முருங்கை | |
| 30. முருங்கை விதை | |
| 31. நீர்முள்ளி | |
| 32. ரேவல் சின்னி கிழங்கு | |
| 33. தான்றிக்காய் | |
| 34. கொட்டிக்கிழங்கு | |
| 35. பேரீச்சை | 2 பலம் (70 கி.) |
| 36. சீனி | 3 பலம் (105 கி.) |
| 37. கொப்பரைத்தேங்காய் | 5 |
| 38. கசகசா | 1 பலம் (35 கி.) |
| 39. பசுநெய் | 3 பலம் (105 கி.) |
| 40. தேன் | 1/2 சேர் (140 கி.) |

செய்முறை

முதலில் கடைச்சரக்குகளைத் தூய்மை செய்யவும். பின்னர் இடித்துத் தூளாக்கவும். கொப்பரைத் தேங்காயைத் துருவி எடுத்துக் கொள்ளவும். சீனியைப் பாலில் கலந்துகொண்டு, அடுப்பேற்றிக் காய்ச்சவும். பாகுபதம் வரச்செய்யவும். பாகுபதத்தில் பொடியையும், தேங்காய்த் துருவலையும் தூவிக்கிளறவும். நெய்யைக் கலந்துகொள்ளவும். பதத்தில்

இறக்கிக்கொண்டு தேனைச் சேர்த்துக் கலக்கவும். இலட்டு போல் உருண்டை பிடிக்கவும்.

### தீரும் பிணிகள்

தாய்மார்களுக்கு ஏற்படும் கருப்பை தொடர்பான பிணிகள், உளப்பிணிகள், சூதகவாயு, ஈளை, இரைப்பு, கழிச்சல், வாதம், இருமல் போன்ற பல்வேறு பிணிகள் நீங்கும்.

இவ்வாறு பிரம்மதேவன் தன் மகனான மன்மதனுக்கு அளிக்க, கலைமகளான தன்மனைவிக்கு விளக்கம் எடுத்துரைக்கின்றான்.

பணிவுடன் வணங்கிக் கலைமகள், இம்மருத்துவ நூலைப் பெற்று, மருமகளான இரதிக்குக் கூறினாள். இரதிதேவியானவள் உலகிற்கு (கும்ப) முனிவழியாகச் சொன்னாள் என்று நன்றாகக் கும்மி கொட்டிப் பாடுங்கள்.



# 2. அகத்தியர் தர்க்கம்-25

## *நூலமைப்பும் வரலாறும்*

அகத்தியரின் பெயரால் உள்ள இச்சுவடியானது 16 பாடல்களைக் கொண்டதாக அகத்தியர் சில்லரைக் கோவையில் அச்சிடப்பட்டுள்ளது. மூலம் மட்டுமே இதில் உள்ளது. எனவே, இதற்கான உரை, பதிப்பாசிரியரால் எழுதப்பட்டுள்ளது.

இப்பாடல்கள் யாவும் முதலிலிருந்தே துவக்கப்பட வில்லை. பாயிரம், காப்புச் செய்யுள் போன்ற அமைப்பு பின்பற்றப்படவில்லை. பாடல்களும் முற்றுப்பெற்றதாக இல்லை. அகத்தியர் பெயரில் நூல் இருப்பினும் அகத்தியரின் தொடர்புள்ளதான சான்றுகள் பாடல்களில் காணப்படவில்லை. நந்திதேவரின் பெயரே வருகின்றது.

எளிய நடையில் பாடல்கள் காணப்பட்டாலும், பொருள் விளங்காமலே உள்ளது. சித்த மருத்துவத்தின் கோட்பாடுகள் ஆங்காங்கே கூறப்பட்டுள்ளன. சித்த மருத்துவர்களை முன்நிறுத்தி அவர்களுக்குத் தக்க அறிவுரைகள் கூறுவதாக இந்நூலமைப்பு உள்ளது. மேலும் உலோகங்களைப் பஞ்சபூத வடிவில் பிரித்துக்காட்டியுள்ளது. சரநூல் பற்றிய கருத்துகளும் மணிக்கயிறு என்ற நாடிநடை பற்றிய கருத்துகளும் கூறப்பட்டுள்ளன. பல்வேறு வகையான சிமிழ்கள் பற்றியும் மந்திரநூலுக்காகிய எழுத்துகளையும், அதற்குண்டாகிய கோணங்களையும் கூறுகின்றது. இவற்றை அறிந்துகொண்டால், யானைமேல் ஊர்வலமாக அழைத்துப் பாராட்டு செய்வார்கள் என்றும் நூலாசிரியர் கூறுகின்றார்.



# அகத்தியர் வைத்திய தர்க்கம் - 25

*1. சீர்பொருந்தும் சாத்திரமும் மருந்து வைப்பு*
*தேவி அங்கமான பொருள் பலவும்[16] சொல்லி*
*ஒரு[17] பொழுது எழுத்தாணி ஓலை அம்மி*
*இயல்பான கருவிமுதல் பையக் கூரைசெப்பும்*
*கூறோடே[18] சாத்திரங்கள் சொன்னா னானால்*
*குருவாகும் அவருடனே எதிர்க்க வேண்டாம்*
*தார்பொருந்தும் சாத்திரங்கள் சொல்லாவிட்டால்*
*சண்டாளப் பயல்களுட பைய வாங்கே.*

சீரிய நல் அறிவும், மருந்துகளைச் செய்யும் பொருட்கள் பலவற்றையும் சொல்லுகின்றேன். எழுத்தாணி, ஓலை, இயல்பான கருவிகளைப் பற்றிய அறிவுடன் நூல்களைச் சொன்னால், ஆசிரியரைப் பகைக்க வேண்டாம். இவற்றைப் பற்றி எதுவும் விளக்கவில்லை என்றால், கீழ்மக்களாகிய அவர்களிடமிருந்து விலகவேண்டும்.

*2. பறையாதே[19] எவர்களுடனும் எதிர்க்க வேண்டாம்*
*பன்னிரண்டு பிழைநீக்கித்[20] தர்க்க நூலைக்*
*குறையாமல் உதித்தது நீ[21] விருதை வாங்கிக்*
*கொள்ளவே அவருடைய கிருபம் போனால்*
*நிறையாகச் சீடனாய் வந்தா னானால்*
*நேர்மையாகச் சொல்லி விருதை[22] ஈந்து*
*துறையாக என்னூலை[23] உரைத்து வைப்பும் சொல்லி*
*சூட்சமாய் அவர்மனதை அறிந்து[24] சொல்வீர்.*

எதுவும் கூறாமல், அவர்களை எதிர்க்க வேண்டாம். பன்னிரண்டு அல்லது பதினாறு பிழைகளை நீக்கி இந்த நூலை இயற்றியுள்ளேன். இந்நூலைப்படித்து, அறிவு பெற்று, பட்டம் பெற்றுக்கொள்ளுங்கள். அவருடைய அருளால், நிறை அறிவுபெற்ற மாணவனாக ஆனான். அவ்வாறு மாணவன் இருந்தால் அவனுக்கு பட்டம் வழங்கி முறையாக இந்த நூலைத் தந்து செய்முறைகளையும் கூறுவாயாக. இதை நுணுக்கமாக அறிந்து செய்யவேண்டும்.

*3. நாராசம் பிடித்தகைக்கு வகைக்குச் சொல்லும்*
*நன்றாக இடது கையில் ஓலை சொல்லும்*
*ஓராதே ஊன்றினதுக்கு உண்மை சொல்லும்*
*ஒட்டிமுடிந் தெழுந்ததற்கு ரூபம் சொல்லும்*
*பாராதே அங்குறித்த வசனம் சொல்லு*[25]
*பாராதே தடக்கேன் சென்றிருந்த வடிவைச் சொல்லும்*[26]
*நேராக நின்றெழுத்தின் நிலையைச் சொல்லும்*
*நிச்சயமாய் அறிவெண்ணும்*[27] *பொருளைச் சொல்லு.*

எழுத்தாணியால் எழுதிய வகைகளைக் கூறுவாயாக. நன்றாக இடது கையில் உள்ள ஓலைச் சுவடியானது கூறும். இந்த நூல் உண்மையைக் கூறும் பேச்சானது இந்நூல் பற்றிக் கூறும் இந்நூலின் அமைப்பைக் கூறும் அறிவென்ற பொருளைக் கூறும். மந்திர எழுத்துக்களைக் கூறும்.

*4. நாராசம் பிடித்தகையை ஞான மூர்த்தி*
*நன்று நீரிடத் தொகையில்*[28] *ஓலை சந்நி*
*ஏறாதே*[29] *ஊன்றினது உண்மை ஞானம்*
*ஒட்டிமுடிந் தெழுந்ததுவே ரூப யோனி*[30]
*பரராம நங்குறித்த வசனம் வாயும்*[31]
*பார்தடங்கோன் சென்றடைந்த வடிவு லிங்கம்*[32]
*நேராக நின்றெழுத்தை வடிவா காரம்*
*நிச்சயமா அரியென்றும் பொருளும் நீயே.*

நாராசம் என்பது எழுத்தாணி, அறிவு சிவமாகும், ஓலையானது சக்தியாகும். எழுத்து இலிங்கம், அரி என்ற திருமாலின் பொருள் நீயே.

*5. நலிந்திருக்கும் செப்பேது அடைப்பு மேது*
*நான்முகத்தோன் வகுத்தவகை சொல்லு*
*குளிர்ந்திருக்கும் அம்மிக்கும் பேர்தான்என்ன?*
*குவிந்தரைக்கும்*[33] *குழவிக்கும் பேர்தான் ஏது*

*தெளிந்தபிடி விரல்தனக்குப் பேர்தான் ஏது*

*தேர்ஏகமுறு[34] மருந்தேது தெளிந்து சொல்லு[35]*

*மொழிந்துரைக்கும் பண்டிதரே இந்த நூலை*

*மோசம்வராது இன்னதென்று மொழிந்திட் டீரே.*

அம்மியின் பேர்தான் என்ன ? இது குளிர்ந்திருக்கும் குவிந்து உள்ள குழவிக்குப் பேர்தான் என்ன? பிடிக்கும் விரலுக்கு என்ன பெயர் ? மருந்து என்ன ? என்று அறிந்து கூறுவாயாக. இப்புத்தகமானது படித்து, அறிய, வாழ்க்கைக்குக் கெடுதல் வராது என்று கூறுவீர்களாக. அம்மி என்பது யோனியாகும். குழவி என்பது ஆண்குறியாக மறைமொழியாகக் கூறப்பட்டுள்ளது.

6. *குளிர்ந்திருந்த அம்மியது சந்நி யாகும்[36]*

*குவிந்துநின்ற குழவியது லிங்க மாகும்*

*தெளிந்தரைக்கும் விரல்ஐந்தும் பஞ்ச பூதம்*

*திரேகமுறும் [37]மருந்தெல்லாம் சிவமேயாகும்*

*நளிந்திருந்த செப்புமுதல் அடைப்பு தானும்[38]*

*நாதருடை சிகாரத்தில் [39]கபாட மாச்சு*

*மொழிந்துரைக்கும் பண்டிதரே இந்த நூலை[40]*

*மோசம்வராது[41] இன்னதென்று மொழிந்திட் டீரே*

அம்மியானது குளிர்ச்சியான சக்தியாகும். அம்மியின் மீதுள்ள குழவியானது லிங்கமாகும். செயல்களைச் செய்யும் விரல்கள் ஐம்பூதங்களும். உடல் சிவபெருமானாகும். மொழியை உடைய மருத்துவரே, இந்நூல் யாரையும் ஏமாற்றாது என்று கூறுவீர்களாக.

7. *பிடித்துரைக்கும் அகல்தனக்குப் பேர்தா னேது ?*

*பிறமூலை தேவதையின் பேர்தா னேது?*

*அடுத்தருந்த முலைப்பால்தான் அதுதா னேது ?[42]*

*அணிவிரலும் பெருவிரலும் அறிந்து சொல்லும்*

*தடித்திருந்த கயிறேது [43]பைதான் [44] ஏது?*
*தவறாமல்[45] சாத்திரங்கள் தானே சொல்லும்*
*படித்தறியும் பண்டிதரே, இந்த நூலைப்*
*பழுதறவே [46] இன்னதென்று பகர்ந்தி டீரே*

நாடியால் அறிந்து வாழ்நாளைக் கூறும் கயிறு எங்கு உள்ளது ? (காற்று) பைதான் எங்குள்ளது? இவற்றையெல்லாம் அறிவுநூல்கள் கூறும் படித்து அறியக் கூடிய மருத்துவர்களே, இப்புத்தகம் குற்றமற்றது என்று எல்லோருக்கும் சொல்லுங்கள்.

8. *பிடித்துரைக்கும் அகல்தனக்குப் பேர்தான்மாயன்*
*பிறமூல தேவதையின் ஈஸ்வ ரன்தான்*
*அடுத்தருந்த[47] முலைப்பால்தான் அமிர்த மாகும்*
*அணிவிரலும் பெருவிரலும் ஆன்[48] சக்தி யாகும்*
*தடித்திருந்த கயிறதுதான் ஆகு வாகும்[49]*
*தவதை பயலைய குண்டம் தானேயாகும்[50]*
*படித்தறியும் பண்டிதரே இந்த நூலைப்*
*பழுதறச் சொல்லியபின் பையை வாங்கே.*

அகல் என்ற மண்விளக்குக்குப் பெயரே மாயன் ஆவர். வேறு மூல தெய்வம் சிவபெருமான் ஆவர். தாய்ப்பாலே மருந்தாகும். அணிவிரல் என்ற சுட்டுவிரலும், கட்டைவிரலும் சிவ சக்தியாகும் கயிறு கைலைமலையாகும். இந்நூலை, படித்த மருத்துவர்களே, குற்றமில்லாது கூறுவீர்களாக.

9. *உரைக்கின்ற செந்தூரம் ஆவ தேது?*
*உத்தரச கந்திதல் [51] தார மேது?*
*அரைக்கின்ற மண்முதல் சீலை யேது?*
*அதுநடுவே [52] குப்பிமுதல் சலாகை யேது?[53]*

*எரிக்கின்ற[53] அடுப்புமுதல் தீப மேது*
*நெகுளாத[54] மணலேது தாழி யேது ?*
*வரைக்கடங்காப் பண்டிதரே இந்த நூலை*
*வகைபிரித்து இன்னதென்று வகுத்தி டீரே?[55]*

புகழ்மிக்க செந்தூரம் எவ்வாறு உள்ளது. இரசம், கந்தகம், தாளகம் போன்ற பாடணங்கள் எங்கே? அரைக்கின்ற மணல், சீலை எங்கே? அதற்கு நடுவில் கண்ணாடிக்குப்பி, அளவிடும் கோல் எங்கே? அடுப்பு, விளக்கு எங்கே? மணல், மண்பானை எங்கே? எல்லையில்லாத அறிவு உள்ள மருத்துவர்களே, இந்த நூலைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்துக் காட்டுங்கள்.

*10. உரைக்கின்ற செந்தூரம் சிவமும் ஆச்சு*
*உற்றஅரி[56] கந்கிரச மூவாறு[57] ஆகும்*
*அரைக்கின்ற மண்முதல் சீலை சந்நி[58]*
*அடைக்குப்பி சலாகைமுதல் மேரு வாகும்*
*எரிக்கின்ற[59] தீயடுப்பு வடவை யாச்சு[60]*
*எருளாத[61] மண்ணுஒரு வேத மாச்சு*
*வரைக்கடங்காத் தாழியது ஆழி யாச்சு*
*வகைசொல்லிப் பண்டிதரே மருந்தை வாங்கே.*

புகழ்மிக்க செந்தூரம் சிவபெருமான் ஆகும். கந்தகம், இரசம், மூவர் ஆவர். (படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழிலும் நடைபெறும்) மண்சீலை என்பன சக்தியாகும். மருந்துகளை அடைக்கும் கலம், கிளரும் உலோகக் குச்சி மேருமலையாகும். எரிகின்ற தீயானது வடவைதீயாகும். மண் வேதமாகும். மண்குடம் கடலானது மருத்துவர்களே, மருந்தைக் கொடுப்பீர்களாக.

*11. பொற்பணியாய்ச் சமைந்தசெப்பு பேர்தா னேது?*
*பொறியான வெள்ளியுட செப்பைச் சொல்லும்*
*நற்பணியாம் சமைந்ததங்கச் செப்பென்னா?[62]*
*நலம்பெரிய சாத்திரங்கள் நன்றாய்ச் சொல்லும்*

*தற்பணியாம் போகாமல் நிலையாய்ந்து?*[63]
*தரணிதனில் இன்னதென்று தரிசித்துப்பார்த்து*[64]
*நற்பணியும் பண்டிதரே இந்த நூலை*
*நலமாக வாய்திறந்து சாற்று வீரே.*

பொன்னால் செய்யப்பட்ட நகைகளுக்கான பெயர் என்ன? வெள்ளிச் செம்பைக் கூறுவாயாக. தங்கச் செம்பு என்ன? இவைகளைப் பற்றி மருத்துவ நூல்கள் நன்றாகக் கூறும். இவ்வாறு நூல்களை ஆய்வுசெய்து, அணிந்து, இவற்றையெல்லாம் வாய்விட்டு நன்றாகக் கூறுவீர்களாக.

*12. பொற்பணியாம் சமைத்தசெப்பு இறையோன் மேரு*[65]
*பேசறியான்*[66] *வெள்ளியென்றால் வேதம் பாதி*
*நற்பணியாம் சமைத்தலிங்கம்* [67] *ஈசன் விந்து*
*நலம் பெரிய சாத்திரங்கள் பரத்தின் வேதம்*
*நற்பணியாய்ப் போகாமல் இந்த நூலைச்*
*சாற்றினேன் விருதுதன்னை வாங்கிக் கொள்வாய்*
*நற்பணியும் பண்டிதரே, சொல்லா விட்டால்*[68]
*நலமாய்ச் சீடனாய் வாங்கி டாயே.*

பொன்னாலான நகைகள் என்பது மேருமலையாகும். வெள்ளி என்பது பாதி வேதம் (இரசவாதம்). நல்ல தொண்டாக உள்ளது. இலிங்கம் இரசம் வடித்தல் இவற்றைப்பற்றிக் கூறினேன். இந்நூலை அறிந்துகொண்டு, பட்டம் பெற்றுக்கொள்வாயாக. இந்நூலைப் பற்றிய விளக்கங்களை அறியமுடியாமல் போனால் மாணவனாக இருந்து பெற்றுக்கொள்ளவும்.

*13. அஞ்சுருவாய் எடுத்ததொரு பஞ்ச லோகம்*
*அனைத்திருந்த*[69] *செப்புக்கும்* [70]*பேர்தான் கேளு*
*கஞ்சமடா ஆகாயம், சிவப்பு வன்னி*[71]
*கருவான லோகம் வாயுவே ஆகும்* [72]

*வஞ்சமறப் பித்தளையும் உறுதியாகும்*[73]
*வேதாந்த திராளன்றால் அப்பின் கூறு*[74]
*நஞ்சகற்றும் பண்டிதரே, இந்த நூலை*
*நாடறிய இன்னதென்று நவிலு வீரே*[75]

உலோகங்கள் ஐந்துவிதமாக உள்ளன. அதில் செம்பின் பெயரைக் கேட்கவும் கருமையான உலோகம், (இரும்பு) வாயுவே ஆகும். பித்தளை வன்மையானது ஆகும். தரா உலோகம் நீரின் கூறு ஆகும். இதை உணர்ந்த மருத்துவர்களே இந்நூலைக் கற்று நாட்டிலுள்ளவர்களுக்கு எடுத்துக் கூறுவீர்களாக.

*14. கஞ்சம்என்ற ஆகாசம் என்றதைத்தான் சொல்லும்*
*கருஞ்செம்பு வன்னிநீர் அதைச் சொல்வி*
*மிஞ்சவே தராவுக்கு அப்பின் கூறு*
*விதமான நிறத்தையெல்லாம் விளங்கிப் பார்த்து*
*ஒஞ்சாமல் எடுத்துரைக்கும் வைத்தியரே*
*ஒவ்வொன்றும் இன்னதென்று உரைத்திட் டீரே*
*வஞ்சமென்று லோகத்தின் வாயு என்னா?*
*வகுத்தானே பிருதுவிக்கு நிறத்தைச் சொல்லு*[76]

வெங்கல உலோகம், வானம் என்றும், கருமையான செம்பு தீ என்றும், தரா நீர் என்றும், வஞ்சம் (இரும்பு, கருவங்கம்) காற்றாகும். நிலத்தின் வண்ணத்தைக் கூறுவாயாக.

*15. கஞ்சமென்ற ஆகாசம் புகைபோல் மேனி*
*கருஞ்செம்பு நிறமென்றால் சிவப்பே யாகும்*
*வஞ்சமென்ற லோகந்தான் கறுப்பே யாகும்*[77]
*வறுத்தாழி பிருதுவியென்றால் பொன்போல் மேனி*[78]
*மிஞ்சவே தாராவுக்கு அப்பின் கூறு*[79]
*விதமான படிகம்போ ல் நிறத்தைச் சொன்னேன்*[80]
*ஒஞ்சாமல் எடுத்துரைக்கும் வைத்தியரே*
*ஒவ்வொன்றா இன்னதென்று பணிந்து கேளே*[81]

வெங்கலம் என்ற வானம், புகைபோல உடல் கொண்டது செம்பு சிவப்பு, வஞ்சம், கறுப்பு பொன் நிலமாகும். தரா நீரின் நிறமான வெண்மை, இவ்வாறு வண்ணங்களைக் கூறினேன். இவற்றைப் பற்றி மருத்துவர்களே கேளுங்கள்.

*16. திடமான கஞ்சத்தின் வீட்டைச் சொல்லு*
*சிகப்பான தாம்பூர ரேகை யென்னா?*
*இடமான அயத்திரா ஊட்டைச் சொல்லும்*
*இயல்பான பித்தளை ரேகை யென்னா?*
*சடமான தராவுக்கு ரேகை சொல்வாய்*
*தருவாகும் அஞ்சனுடைய வீட்டைச் சொல்லி*
*திடம்பெரிய வைத்தியரே, இந்த நூலைச்*
*சூட்சமா இன்னதென்று தொகுத்திட் டீரே.*[82]

உறுதியான வெங்கலத்தின் இடத்தைக் கூறுகின்றேன். சிவப்பான செம்பின் கோடுகள் என்ன? இரும்புத்தராவின் இடத்தைக் கூறுகின்றேன். தராவின் வரிகளைப் பற்றிக் கூறுகின்றேன். மரமாகும் ஐந்தின் இடத்தைக் கூறி, நுணுக்கமாக இந்த நூலை நான் தொகுத்துள்ளேன்.

*17. திடமான கஞ்சத்தின் வீடு வட்டச்*
*சிகப்பான தாம்பிர மூன்றுகோண*
*இடமான அயன்வீடு அறுகோணம்*
*இயல்பாந...... தின் கோண மாகும்*
*சடமாந தராவுக்குப் பிறைபோ லாகும்*
*தருவான அஞ்சினுட சக்கரத்தின் வீடு*
*திடம்பெரிய வைத்தியரே இந்த நூலைச்*
*சூட்சமாய்ப் பணிந்து நீ கேளே.*

வெங்கலத்தின் இடம் வட்டமானது. செம்மையான செம்பு முக்கோணமானது. இரும்பினிடம் அறுகோணமாகும். இயற்கையாக ........... கோணமாகும். தராவானது நிலவு போலிருக்கும். கற்பக மரம் போன்று விரும்பியதைத்தரும் உலோகங்கள்; இந்நூலை மருத்துவர்களே, நீங்கள் நுணுக்கமாகக் கேட்பீர்களாக.

18. திடம்பெரிய கஞ்சத்தி னெழுத்தைச் சொல்லு
சிவப்பான தாம்பூர அச்சரத்தைச் சொல்லு
ஏடறய லோகத்தின் எழுத்தைச் சொல்லு
இயல்பான பித்தளை எழுத்தைச் சொல்லுவாய்
கோடறிய தராவுக்கு அச்சரங்கள் சொல்லு
குருவாகும் பண்டிதரே தொகுத்துப் பார்த்து
நாடறிய இந்நூலின் எழுத்தைச் சொல்லி
நயந்துநிற மருந்தடைத்த செப்பு வாங்கே.

கஞ்ச உலோகத்தின் வரிகளைக் கூறுவாயாக, செம்பின் வரிகளைக் கூறுவாயாக நூல்களின் வழியாக இவற்றைப் பற்றிச் சொல்ல வேண்டும். பித்தளையின் வரிகளைக் கூறுவாயாக. தராவின் வரிகளைப் பற்றி எடுத்துக் கூறவும். ஆசிரியராய் உள்ள மருத்துவர்களே, இவற்றையெல்லாம் தொகுத்துப் பார்த்து, இந்நூலைப் படைத்திருக்கிறேன். பணிவாக இவ்வுலோகங்களாலான சிமிழை வாங்குவீர்களாக.

19. தேடறிய கஞ்சந்தான் யகார மாச்சு
தீயான தாம்பூர சிகார மாச்சு
ஏடறிய லோகந்தான் வகார மாச்சு
இடுதாளை பிருதிவியும் நகார மாச்சு
கோடறிய தராவுக்கு மகாரம் சொன்னேன்
குருவாகும் உருவான பஞ்ச பூதம்
நாடறிய இந்நூலில் இன்னவென்று சொல்வேன்
ஞானமல்லா வைத்தியரே, வணங்கிக் கேளே.

காண்பதற்கரிய வெங்கலம் ய என்று உள்ளது. செம்பு சி என்ற எழுத்தாக உள்ளது. உலோகம் வ என்பதாக உள்ளது. பூமியான பொன் ந என்ற எழுத்தானது. தரா என்ற உலோகத்தின் புளிச்சுவை கூறினேன். எல்லாவற்றிற்கும் மூலமாகிய குருவாகும் ஐம்பூதங்களைப்பற்றி எல்லோருக்கும் இந்நூலில் விளக்கிக் கூறுவேன். இதனை அறியாத மருத்துவர்களே, பணிந்து கேட்பீர்களாக.

20. மரத்தினால் கடைந்தசெப்பு வகைதான் சொல்லு
வளர்மூங்கில் ஈரலுக்கும் வகைதா னென்ன?
திறத்தினால் மிளாவிடைய கொம்பைச் சொல்லு
திறமான மேசகுலச் செப்பைச் சொல்லு
பரத்தினால் எழுந்ததொரு பசுவினத்தின் கொம்பு
பாங்கான கருவியுடன் மூலம் சொல்லு
சிரத்தினால் எழுந்ததொரு கரியின் கொம்பைத்
திடம்பெரிய வைத்தியரே செப்பு வீரே.

மரத்தினால் செய்யப்பட்ட சிமிழ்களின் வகைகளை அறியவும். மூங்கில், மான்கொம்பு, எருமைக்கொம்பு, பசுவின் கொம்பு, யானைத்தந்தம் என்று பலவாகும். இவற்றைப் பற்றிக் கூறுங்கள்.

21. மரத்தினால் கடைந்த செப்புரி . . . . . . கன்மூலம்
திறமாதி குலந்தனக்கும் பேர்தான் கேளும்
வளர்மூங்கில் ஈரல்என்றால் மாலி னோசை
சிரத்தினால் கடைந்த மிளாவி கபமூர்த்தி
திறமான மேசகுல அங்கோல பீடம்
பரத்தினால் எழுந்ததொரு பசுவின்தான் நந்திஈசர்
பாங்கான கறியென்றால் வானோ ராகும்
சிரத்தினால் எழுந்ததொரு கரியன் கொம்பைச்
சொல்லுவேன் கயமுகனுடைய மூலந் தானே.

மூங்கில் செப்பு என்பது பெருமைமிக்கது. மானின் தலையில் உள்ள கொம்பானது மங்கலத்தைத் தரும் வடிவமாகும். எருமைக்கொம்பானது அழகிய கோலங்களடங்கிய மேடையாகும். பசுவின் கொம்பானது நந்தீசர் ஆகும். தந்தமானது விநாயகரின் அடிப்படையாகும்.

22. ஓங்குகின்ற தாம்பூல மகிமை சொல்லு,
விளங்குகின்ற பொருளதுதான் அறிந்துசொல்லு,
நீங்குகின்ற பிணிசாமம் ஏது சொல்லும்?
நீளைவுதான் விசுவாசம் ஏது சொல்வாய்?

*ஓங்குகின்ற சாத்திரத்தின் உண்மை சொல்லு,*
*ஒருகோடி சாத்திரங்கள் ஆராய்ந்து சொல்லு,*
*ஏங்குகின்ற வைத்தியரே இந்த நூலை*
*இயல்பாக இன்னதென்று உரைத்திட் டீரே.*

பெருமைமிக்க தாம்பூலத்தின் புகழைக் கூறுவாய். பொருளையறிந்து கூறுக. பிணியின் சாமம் என்ன சொல்லும்? நினைவின் பற்றுதல் என்ன? பெருமைமிக்க அறிவு நூலின் உண்மையைக்கூறுக. கோடிக்கணக்கான அறிவு நூல்களை ஆய்ந்து கூறுக. ஏக்கம் கொண்டுள்ள மருத்துவர்களே இந்நூலின் தன்மைகளைக் கூறுவீர்களாக.

23. *கடவுளுரைதான் தனக்கு நந்தி கவியார்போது*
*அடவுடன் நந்தி கயிலாதமில்லை என்று*
*திடவுடன் அரனார் தான் முத்திரி*
*சடைதான் அதனை ஊன்றி முதனே என்றி*
*சொல்லு முளைத்தது பிரம்புதானே.*

*(பாடல் வரிகள் தெளிவுடன் காணப்படவில்லை.)*

24. *பண்டிதரே பையெடுக்கும் பரிசைக் கேளீர்*
*பாதாதி கேசமுதல் வெள்ளைச் சீலை*
*மின்றியறு நாலு விரலகம் சுற்று*
*மிகுதி பதினாறு விரலகம் கூட்டி*
*பண்டித விதிப்பயன் படிகயிறு நாற்சாண்*
*பரமசிவன் தானுமன்னாள் பகர்ந்த நூலைக்*
*கண்டவிழி மாதுமையாள் உரைக்க*
*அருள்முனிவோர் ஆய்ந்து எடுத்தப் பையதாமே.*

மருத்துவர்களே, காற்றுப் பையின் பரிசைக் கேட்பீர்களாக. தலை முதல் கால் வரை வெள்ளையான துணியாகும் நான்கு விரல் அகலம் சுற்றி உள்ளது. மேலும் 16 விரல் அகலம் சேர்த்து (20 அகலம்) உள்ளது. சரப்பயிற்சி பற்றியவைகளை பரமசிவன்

தானும் பார்வதிக்கு கூறினார். பார்வதியாரும், அருள் பெற்ற முனிவருக்கு எடுத்துக்கூற முனிவர்கள் ஆய்ந்து இந்நூலைச் செய்தார்கள்.

*25. சீலையாம் சிவமே நல்ல*
*செயவரும் தானாம் சந்தி*
*ஆலயந் தன்னைச் சூழ்ந்த*
*அச்சரம் கயிறு தானே*
*வேலைநூல் வேத மாகும்*
*என்றுதான் முனிஎந் தன்நாள்*
*ஆனைமேல் உன்னைக் கண்டோர்*
*அருளிய வேத நூலை.*

**சீலை என்பது சிவபெருமான் செயல்தான். சக்தி ஆலையம் என்பது எழுத்தாலான கயிறு. வேதை நூல் என்ற நூல் வேதமாகும் என்று முனிவர் கூறினார். அவர் அருளிய வேதநூலைக் கண்டோரை யானைமேல் வைத்து வாழ்த்துவார்கள்.**



# 3. அகத்தியர் பச்சை -16

## *நூலமைப்பும், வரலாறும்*

இந்நூலானது, “அகத்தியர் வைத்திய சில்லறைக் கோவை என்ற நூலில் மூலம் மட்டும் அச்சிடப்பட்டுள்ளது. பாயிரம், காப்புச் செய்யுள் என்பன இல்லாதபடியால், பாதியிலிருந்தே துவங்குவதாகக் கூறலாம். பச்சை என்பதற்கு வரிசை என்ற பொருள் உள்ளது. வரிசையாக அந்தாதி முறையில் பாடல்கள் உள்ளன.

அகத்தியரின் பெயரில் இந்நூல் தலைப்பிடப்பட்டு இருந்தாலும், பாடல்களில் எவ்விதமான சான்றுகளும் இல்லை. சித்தர் என்றே கூறப்பட்டுள்ளது.

அகத்தியர் வைத்திய தர்க்கம் என்ற சித்த மருத்துவ நூலைப் போன்றே இதுவும் காணப்படுகின்றது. பாடாணங்களையும், ஐம்பூதங்களையும் பற்றி விளக்கமாகக் கூறுகின்றது. பாடாணங்களின் தன்மைகளையும், அவற்றின் மருத்துவச் செய்கைகளையும் கூறுகின்றது. புற மருத்துவ முறையான புகைபோடுதலைப் பற்றி அதிகமான செய்திகளைத் தருகின்றது. மூக்கில் புகை போடுதல், மூக்கில் திரிபுகை ஏற்றுதல் என்ற வழக்கழிந்த முறைகள் நமக்கு வியப்பைத் தருகின்றன.

முற்றுப் பெறாத நிலையில் இந்நூல் அமைந்துள்ளது. பதிப்பாசிரியரால் இந்நூலுக்கும், உரை எழுதப்பட்டுள்ளது.



# அகத்தியர் பச்சை 16

*1. அரிதாரம் பிரிதுவாயாகி நிற்கும்*
*ஆனதொரு சவ்வீரம் அப்பு வாகும்*
*பெரிதான கெளரியது வாயு வாகும்*[83]
*பின்னுமொரு வெள்ளையுமே தேயு வாகும்*[84]
*அரிதான இலிங்கமது ஆகாய மாகும்*
*அப்பனே பச்சையுட நாட லாகும்*[85]
*தெரியாதே வைத்தியரே இந்நூ லப்பா*
*சித்தர்ய்யா சொன்னவித்தை செகத்தில் காணேன்.*[86]

அரிதாரம் என்ற தாளகம் மண்ணின் கூறு என்று அழைக்கப்படும். சவ்வீரமானது நீரின் கூறு. கெளரி பாடாணமானது காற்றின் கூறாகும். வெள்ளைப் பாடாணம் தீயின் கூறு. லிங்கம் ஆகாயத்தின் கூறு. இக்கொள்கைகள் உள்ள இந்த நூலை வரிசையாகப் போற்றுதல் வேண்டும். இது பற்றிய விவரங்களை அறியாத மருத்துவரே, சித்தர்கள் சொல்லிய அறிவைப் பெற்றவர்களை, இவ்வுலகில் காண முடியவில்லை.

*2. செகத்திலுள்ள வைத்தியரே செப்பக் கேளு*
*திறமான அரிதாரக் கட்டி வாங்கி*
*சுகத்திலே சுண்ணாம்புக் குள்ளே வைத்துச்*
*சுத்திசெய்து தானெடுத்து வைத்துக் கொண்டு*[87]
*இகத்திலே மனிதருக்கு ஈளை காசம்*
*எலிக்கடிகள் விடபாகம் பித்தப் பாண்டு*
*மகத்தான குளிர்காய்ச்சல் மருள்கொண்ட*[88]
*வரப்பட்ட நோய்களுக்கு இவையே சுக்கில்*

நாட்டில் உள்ள மருத்துவரே, கேளுங்கள், வலிமை மிக்க அரிதாரக் கட்டியை எடுத்துக்கொள்ளவும்(சுண்ணாம்புக்குள்ளே) கிளிஞ்சல் நடுவே வைத்து, தண்ணீர் விடவும். சுண்ணாம்பின் ஆவியானது வெளியேறியவுடன் எடுக்கவும். தூய்மை செய்துகொண்டு, இப்பிறவியில் மனிதர்களுக்கு ஏற்படும் இரைப்பு, இளைப்பு, எலிக்கடி, நஞ்சுகள், பித்த பாண்டு, குளிர்சுரம் என்ற நோய்களுக்கு சுக்குத்தூளில் உண்ணவும்.

3. *சுக்கான சவ்வீரக் கட்டி வாங்கிச்*
*சுவாசமொடு காசம்நீ ராம்பல் வீக்கம்*
*மிக்கான குனன்மமெட்டு மெய்யி ளைப்பும்*[89]
*மிகுந்ததொரு நெஞ்சடைப்பு மிளகில் செய்ய*
*தொக்கான சூலையுடன் வயிற்றல் கெண்டை*
*தோராத*[90] *நீருளுவை நீரா மைக்கும்*
*சிக்காத கொடிவேலி வேர ரைத்துத்*[91]
*திறமாக அரைப்பணந்தான்*[92] *செய்யப் போமே.*

**உலர்ந்துபோன வீரக்கட்டியை தூய்மையாக்கவும் இதனை இரைப்பு, இளைப்பு, நீராம்பல், வீக்கம், வயிற்றுவலி, உடல் இளைப்பு, நெஞ்சடைப்பு போன்ற நோய்களுக்கு மிளகுத் தூளில் உண்ணவும். மேலும் சூலை, கெண்டை நீரளுவை, நீராமை போன்றவைகளுக்குக் கொடிவேலி வேரை அரைத்துக் கற்கமாக்கி அத்துடன் 1/2 பணம் அளவுக்கு உண்ணத்தீரும்.**

4. *போமடா கௌரியுட போக்கைக் கேளு*[93]
*புகழான தோடமொடு சுரத்திற் கெல்லாம்*
*தாமடா சுக்கினுட தண்ணீர் தன்னில்*
*தரியாதே கால்பணந்தான்* [94] *தாக்கப் போகும்*
*நாமடா சொல்லுகின்றோம் கிரந்தி மேகம்*[95]
*நயமாகும் கறுப்புக்கட்டி*[96] *தன்னி லீய*
........................................................
*ஒருகோடி*[97] *நோய்களெல்லாம் ஒழிக்கும் பாரே.*

**கௌரி பாடாணத்தின் குணத்தை அறிவாயாக. குற்றங்களால் ஏற்பட்ட சுரம் தீரக் கால்பண அளவு சுக்கு குடிநீரில் செந்தூரம் போன்றவைகளை உட்கொள்ளவும். கறுப்புக் கட்டியில் வைத்துண்ணக் கிரந்தி, மேகம் போன்ற பல்வேறு பிணிகளை நீக்கும்.**

5. *பாரென்ன வெள்ளைப்பா டாணந் தன்னைப்*
*பாங்கான வெள்ளெருக்கம் பாலி லாட்டி*
*சேரென்ன சிறுபயறு உண்டை செய்து*
*திறமான பெருவயிறு உளமாந் தைக்கு*

*சாறென்ன வேப்பிலைச்சாறு உளமாந் தைக்குச்*
*சணத்திலே பெருவயிறு குமட்டித் தீரும்*
*வேறென்ன சோகைக்கு இப்படியே செய்ய[98]*
*வெகுகால நோய்களெல்லாம் வெகுண்டு போமே.*

வெள்ளைப் பாடாணத்தை எடுத்துக்கொள்ளவும். வெள்ளெருக்கம் பால் விட்டரைத்துச் சிறுபயறளவுக்கு மாத்திரைகளாகச் செய்துகொள்ளவும். வேப்பிலைச் சாற்றுடன் உட்கொள்ளப் பெருவயிறு, உளமாந்தை தீரும். பேதியாகும். இவ்வாறே வெளுப்பு நோய்க்கும் தரலாம். நீண்ட காலமாக உள்ள நோய்கள் நீங்கும்.

6. *போகுமடா இலிங்கமதில் சன்னி தோடம்*
*போகாத[99] நெஞ்சடைப்பு வாயு மூர்ச்சை*
*தாகமே வயிற்றெரிவு வயிற்றி லூதல்*
*தனியிஞ்சிக் கரசத்தில் [100] தாக்கப் போகும்[101]*
*மேகமே[102] சூலையொடு பித்தப் பாண்டு[103]*
*மீளப்பா வயிற்றுவலி குன்ம் சோகை*
*பாகமாய்க் கொடிவேலி கசாயத்தில் செய்யப்*
*பறக்குமடா இன்னும்வெகு ரோகந் தானே.*

இலிங்கமானது சன்னிதோடம், நீண்ட நாளைய நெஞ்சடைப்பு, வாயு, மயக்கம், நீர்வேட்கை, வயிற்றெரிச்சல், வயிறு வீங்குதல் என்ற பிணிகளைக் களையும். துணை மருந்தாக இஞ்சிச் சாற்றில் உட்கொள்ள வேண்டும். கொடிவேலிக் குடிநீரில் அருந்த, வயிற்றுவலி, குன்மம் (குடற்புண்) வெளுப்பு நோய் என்பன தீரும்.

7. *காந்தம் நாலு கந்திசமன்*
*கரியபான் சாறு[104] விட்டரைத்தும்*
*போந்த சட்டி தனில்தடவிப்*
*போட்டே மூடி ஒருசட்டி*
*பாந்த மாகச் சீலைசெய்து*
*பாங்காய்ப் புடத்தைப் போட்டெடுத்து*
*வாந்த மாகப் பின்னுமொரு*
*வளமா முன்போல் சீலைசெய்யே.*

காந்தம் 4 பங்கு கந்தகம் 4 பங்கு இரண்டையும் கரிசாலைச்சாற்றிலரைத்துச்சட்டியிலிட்டு மூடி சீலைமண் செய்து புடமிடவும் செந்தூரமாகும்.

8. *செய்யுமுறைச் சொல்லுகின்றோம்*
*சேரசெந்தூரம் தன்னுடனே*
*வையும் கந்தி சரிசமனாய்*
*வளருமு[105] காயப்பழச் சாற்றாலரைத்து*
*மெய்யே[106] முன்போல் சட்டியிலிட்டு*
*மேலோர் சட்டி தனைமூடித்*
*துய்ய மணங்கள் ஏழுசெய்து[107]*
*திறமாய்ப் புடத்தைப் போட்டிடுமே.*

காந்தச் செந்தூரம், கந்தகம் ஆகியவற்றைக் கூட்டி, பழச்சாற்றிலரைத்துக் கொள்ளவும். சட்டியிலிட்டு மேல்மூடி, சீலை மண் செய்யவும். இவ்வாறு செய்தபின் புடமிடச் செந்தூரமாகும். 7 முறை செய்தபின் பயன்படுத்தவும்.

9. *போட்டெ டுத்த செந்தூரம்*
*போமே வெள்ளை நீரடைப்பு*
*நீட்டச் சோகை பாண்டுவுடன்*
*நீராம் பல்மேல் வயிற்றுவலி*
*மூட்டத் தேனும் திரிகடுகு*
*மூன்றே நாளும் கொடுத்திடவே*
*வாட்டப் படாதே ஓடிவிடும்[108]*
*வளமாய்ச்[109] சித்தர் செந்தூரமிதே.*

வெள்ளை, நீரடைப்பு, நாட்பட்ட வெளுப்பு நோய், இரத்த குறைவு, நீர்க்கட்டு, வயிற்றுவலி என்பன. திரிகடுகுத்தூள், தேனுடன் கூட்டி மூன்று நாட்கள் அருந்த நீங்கும்.

10. *சாதி இலிங்கம் நாலுடனே*
*சமனாய் வாரங் கரிநாலு*
*ஆதி சீலை யாறாக்கி*
*அதிலே உருட்டித்திரி[110]*

*சூதா[111] சூலை மண்டையிடி*
*தொடர்ந்த பரங்கி மேகமெல்லாம்*
*வாடை காட்ட[112] ஓடிவிடும்*
*மகத்தான சித்தர் புகையிதுவே.*

சாதி இலிங்கம் 4 பங்கு, கரி 4 பங்கு அரைத்துக் கொள்ளவும். துணியை ஆறுபங்காகக் கிழித்து, அதில் தடவி சுருட்டவும். திரியாகச் செய்து கொள்ளவும். திரியை உலர்த்தியபின் கொளுத்திப் புகைபிடிக்க, சூலை மண்டையிடி, பரங்கி மேகம் என்பன நீங்கும். சித்தர்கள் கூறிய புகை இதுவேயாகும்.

11. *எருக்கம் வேரை இழைத்தரைத்து[113]*
*இயல்பாம் இலிங்க மதில்பிசிறி*
*பருக்கக் காய[114] வைத்தெடுத்துப்*
*பதமாய்ச் சுங்கான் தனில்குடிக்க[115]*
*வருத்த மான புண்புரையும்[116]*
*வயிற்றில் கட்டி தலைக்குத்தும்*
*இறுக்கத் துடனே ஓடிவிடும்*
*இயல்பாய் சித்தர் புகையிதுவே.*

எருக்கம் வேரை இழைத்து அரைத்துக் கொள்ளவும். இலிங்கத்தின் மீது போட்டு உலர்த்திக் கொள்ளவும். புகை பிடிப்பான் மூலம் புகைபிடிக்கவும். துன்பம் தரும் புண், புரை, வயிற்றில் கட்டி, தலைவலி என்பன நீங்கும். சித்தர்கள்·கூறிய புகை இதுவேயாகும்.

12. *ஆவாரம் கரியும் நாலு*
*அதனுடன் இலிங்கம் மூன்று*
*தேவா[117] குங்கிலியமிரண்டு*
*செயவீரம்[118] தானும் ஒன்று*
*தா. . . அரைத்துச் சுங்கான்*
*தன்னிலே வைத்துக் கொள்ள*
*போவதே சூலை புண்கள்*
*பொய்யல்ல சித்தர் சொன்னார்*

ஆவாரஞ்செடியைச் சுட்டெரித்து எடுத்த கரி 4 பங்கு. இலிங்கம் 3 பங்கு, குங்கிலியம் 2 பங்கு, வீரம் 1 பங்கு கலந்து கொள்ளவும். அரைத்துப் பொடி செய்து, புகைபிடிப்பானில் பிடிக்கவும். சூலை புண்கள் என்பன தீரும். சித்தர்கள் கூறிய புகை இதுவேயாகும்.

*13. ஆலத்திப் பூரம் நாலு*
*அதனுட காந்த மிரண்டு*
*கோலப்பா டாண மிரண்டு*
*கொடியதோர் கௌரி ஒன்று*
*சாலக் கொடிவேர்*
*சவ்வீரம் அரைதான் கூட்டி*
*மூலமுன் படியே போல*[119]
*முடிந்தரைத்து உலர்த்தி வையே.*
*முடிந்தரைத்து உலர்த்தி வையே.*[120]

*14. எடுத்த வில்லைக்கு இதவாக*
*இயல்பாம் புளியஞ் சிராய்கட்டு*[121]
*வடிப்ப மாக உலைமூடி*
*வைத்தே தீயிட் டரைவில்லை*[122]
*பொடித்தே போட்டு ஆசனத்தைப்*
*பிடிக்க மூல பவுத்திரமும்*
*தொடுத்த புண்கள் புரையோடும்*[123]
*சொன்னார் சித்தர் புகையிதுவே.*

கற்பூரம் 4 பங்கு, காந்தம் 2 பங்கு கோலபாடாணம் 2 பங்கு, கௌரிபாடாணம் 1 பங்கு, வீரம் 1/2 பங்கு முன் போலவே கலந்தரைத்துக்கொண்டு, உலர்த்தவும். வில்லை தட்டவும். புளியஞ்சிராய் கொண்டு எரிக்கவும். புகையானது ஆசன வாயில் படும்படி காட்டவும். இதனால் மூலம், பவுத்திரம், புரை புண்கள் நீங்கும். சித்தர்கள் கண்ட புகையிதுவேயாகும்.

15. தாரமும் இரசமும் கெந்தி
சரியதாய்த் தூளே செய்து
பாரமாய்ச் சீலை தன்னில்
பரப்பியே திரியு ருட்டி
வீரமாம் விளக்கில் போட்டு
வேப்பெண்ணெய் தன்னை வார்த்துச்
கோரமாம் விளக்கில் வந்த[124]
கொடும்புகை மூக்கி லேற்றே.[125]

அரிதாரம், இரசம், கந்தகம் சமஎடை வீதம் கலந்துகொண்டு பொடிசெய்து கொள்ளவும். துணியில் பரப்பி, உருட்டவும். திரியாகச்செய்து கொள்ளவும். விளக்கெண்ணெயை விளக்கில்விட்டுத் திரியைக் கொளுத்திப் புகையை மூக்கில் பிடிக்கவும்.

16. ஏற்றிடில் சன்னி தோடம்[126]
எலும்பிலடி அட்ட ரோகம்[127]
பார்த்திடில் பரங்கிச் சூலை[128]
பலகடி முதலாய் உள்ள
போற்றிடில் தீரு மென்றே[129]
பொருப்பின்மே லிருந்தோர் சொன்னார்.[130]

இப்புகையானது சன்னிதோடம், எலும்பில் அடிபட்ட எட்டு வகையான நோய்கள், பரங்கிப்புண், சூலை, பலவிதமான விடக்கடிகள் என்பனவற்றை நீக்கும். இவ்வாறு மலையில் உள்ள முனிவர்கள் கூறினார்கள். அவர்கள் கூறிய மருத்துவ முறைகளை உலகில் உள்ள மக்கள் நலமுடன் வாழக் கூறுகின்றேன்.



# 4. அகத்தியர் மூலிகை மர்மம்

## *நூலமைப்பும் வரலாறும்*

இந்நூல் இதுவரை வெளிவராத ஓர் சிறந்த நூலாகும். மூலிகைகளின் பயன்பாடு பற்றிய செய்திகள் எளிய பாடல்களில் கூறப்படுவது இதன் சிறப்பாகும்.

கும்பமுனி என்ற அகத்தியரை இதன் நூலாசிரியராக முதல் பாடல் கூறுகின்றது. மூலிகைகள் எண்ணிக்கை 4444 என்று பாடல் 27 இல் கூறப்பட்டுள்ளது. போகர் நிகண்டில் இப்பாடல் 52 ஆம் பாடலாக உள்ளது. இது வரலாற்றாய்வாளர்களுக்கு மிகவும் பயன்படும் குறிப்பாகும். 4444 இல் கற்ப மூலிகைகளைத் தனியாகக் கூறுவதாகவும் உள்ளமை மூலிகைகளைப் பிரித்தறியும் போக்கைக் காட்டுவதாக உள்ளது.

மேலும் மூலிகைகள் தவிரக் கத்தூரி கோரோசனை போன்ற மணப் பொருட்கள் பற்றியும் கூறுகின்றார். மருந்து செய் முறையும் கூறப்பட்டுள்ளது. பத்திய வகைகளும் ஊறுகாய் செய்தலும் கூறப்பட்டுள்ளன. இவையாவும் பொதுமக்களுக்கு மிகவும் பயன்படுவனவாகும்.

# அகத்தியர் மூலிகை மர்மம்

*1. சம்புடனே வேர் விரையை*
*உண்பவர்க்குக் கிராணி மூலம்*
*தெம்புடனே தீருமென்று கும்பமுனி*
*தானுரைத்தார்.*

நாவல் வேரையும், கொட்டையும் பொடிசெய்து தக்கபடி அனுபானத்தில் உண்ண, கிராணி மூலம் என்பன நீங்கும். இவ்வாறு கும்பமுனியான அகத்தியர் கூறுகினார்.

*2. சித்திரபிலத்து மூலம்*
*மெத்த ஆவலாய் உணர்த்திக் கத்தாகிலும் கியாழம்*
*வைத்தாகிலும் [134] குடிக்கில் பித்தமொடு*
*மூம் [135] பெருத்ததொரு[136] மேல்வயிறும்*
*அத்திகர தாபமுடன்*
*இத்தனை நோயேகி விடும்.*

சித்திரமூலம் என்ற கொடிவேலியை உலர்த்திப் பொடிசெய்தாவது, குடிநீர் செய்தாவது குடிக்கவும். பித்தம், சீதக்கழிச்சல், பெருவயிறு எலும்பைப் பற்றிய சுரம், நீர்வேட்கை என்பன தீரும்.

*3. நிலவாரை நுணுக்கில் [137] மலை போலும்*
*ஊதும் வயிறு குலைவாய் குலைந்ததது*
*நிலையாது போகும் நிசம் தும்பியது தான் குடிக்கில்*
*அம்பிலிது[138] கொடிய பம்பரம் போலவே கழன்று[139]*
*வெம் பித்தம் மெய்ப்பிக்கும்*

நிலவாரையைப் பொடி செய்துண்ணப் பெருவயிறு நீங்கும். தும்பையைக் குடிநீரிலிட்டுக் குடிக்க கொடிய பித்தம் நீங்கும்.

4. *கரிசலாங்கண்ணி மாதர்*[140] *பிரியாத வசியமுண்டு*
*தெரியாத கண்விளங்கும் தரியாது*[141] *பாண்டிருமல்*
*ஆவாரைப்*[142] *பிரமேகம் மாற்றுமே.*

கையான், பெண்களுக்கு மிகவும் விருப்பமான மூலிகையாகும். (கையான் தைலம் கூந்தலை வளரச் செய்வதால் இருக்கலாம்) இதன் மூலம் செய்யப்பட்ட மருந்துகள் கண்நோய்கள், வெளுப்பு நோய், இருமல் என்பன தீர்க்கும். ஆவாரை மகளிருக்கு ஏற்படும் கசிவை நீக்கும்.

5. *சங்குதனின்*[143] *வேர்ப்பொடியைத்*[144]
*திங்க அதில் மேகமெல்லாம்*
*இங்கிதமாய் ஏக முண்டு*
*மங்கை பாகர் தாமுரைத்தார்*

சங்கங்குப்பியின் வேர்ப்பொடியை உண்ண, மேகநோய்கள் நீங்கும். இதனைச் சிவபெருமான் உரைத்தார்.

6. *தழுதாழை வேர்ச் சமூலம்*
*வழுவாமலே கொணர்ந்து*[145]
*விழுதோடவே உண்ணவே*
*பித்தமதில் வாதமெல்லாம்*[146]
*மெத்தஅதி சூலைகளும்*
*உற்றுநில்லா தோடிவிடும்.*

தழுதாழையின் சமூல விழுதை உட்கொள்ளப் பித்தம், வாதம் தொடர்பான சூலை நோய்கள் நீங்கும்.

7. *வித்தகமாய்*[147] *சூனிய முடக்கொத்தானுமே*
*சமூலமெடுத்து ........*
*வித்தராய மாயரைத்து மெத்தவே ஆவலாய்*
*உண்ணவே கட்டுகள் மலமும் சீதம்*
*விட்டுவிடுமே ...... பயிலக் கட்டுவலி*
*தான் தானும் ஓடும்*
*திட்டமதாய் செயலாகும்*[148]

முடக்கொற்றான் இலையை உண்ண முடக்குவாதமான பிடிப்புகள், மலக்கட்டு, சீதக்கழிச்சல் ஆகியன தீரும்.

8. *முட்காவேளை தனைச்*[149]
*சுக்காகவே உலர்த்தி*
*திங்காமலே குடித்து*
*விக்காமலே உண்ண அருந்தல்*
*பேதிகளும் சயமாகவே*[150] *சுரங்கள்*
*தயவாகவே அடங்கும்*
*நயமாகும் காயசித்தியும்*
*ஆதண்டவலி*[151] *அகற்றுமே.*

முட்காவேளை காயவைத்துப் பொடி செய்து உண்ணவும். குடிநீரிலிட்டுக் குடிக்கவும். இதனால் கழிச்சல், காசம், சுரங்கள் என்பன நீங்கும். இது காய கற்ப மூலிகைகளில் ஒன்றாகும். ஆதண்ட வலியைப் போக்கும்.

9. *கொல்லங் கோவை சூழ்கிழங்கை*
*நல்லாவின் பாலில் உண்ண*
*எல்லா விடமும் மீளும்,*[152] *வில்லடை*
*இல்லாமலே ஓடும்*
*முத்தமெனும் மூலமதில்*
*மெத்த வயிறோமல்*[153] *நிற்கும்*
*சத்தியொடு தாகமுடன்*
*கத்தி*[54] *முன்னில்லாது சொன்னேன்.*

கொல்லங்கோவைக்கிழங்கைப் பாலிலிட்டு அவித்து உண்ணவும். விடக்கடிகள் நீங்கும். மூலம், வயிற்றுக்கேடுகள், என்பன முத்தக்காசால் தீரும். வாந்தி, நீர்வேட்கை என்பனவும் தீரும்.

10. *இம்பூரல் வேர் சமூலம்*
*தெம்பாகவே கொணர்ந்து*
*தம்பிரானையே நினைந்து*
*தெம்பாகவே உண்ணவே*

*குத்திருமல் கோழை ,சலம்*
*இரத்தமொடு*[155] *சீ விழுதல்*
*அற்றுவிடும் மேகவாசம்*[156]
*புத்தியுடன் உண்ணவே.*[157]

இம்பூரல் சமூலத்தைப் பொடி செய்து தக்க அனுபானத்தில் உண்ணவும். கோழை, சலம் இரத்தகாசம் மேகப்பிணிகள் நீங்கும்.

11. *சிவனார் வேம்பு தனை*
*நவநாதர் பேரெழுதிச்*[158]
*சிவமாகவே உண்ணவே*[159]
*தவமாகும் காய சித்தி*
*பங்கியம் சேர் நீர் மூழ்கில்*
*சங்கு மித நூறு தனில்*
*மங்கை பிரியா வசியம்*
*எங்கு மிகவே வசியம்*[160]

சிவனார் வேம்பை உண்ண உடல்வலிமை பெறும். இது காயகற்ப மூலிகையாகும். (சிவம்-நன்மை) சங்கங்குப்பியை உலர்த்திப்பொடி செய்துண்ண பெண்கள் விரும்பும் வண்ணம் அழகுண்டாகும்.

12. *சீராகும் செங்கழுநீர்*
*தோராத சீ வசியம்*
*மாறாத நாற கரந்தை*
*பூராய வித்தை தரும்*[161]
*ஆதளம் பால் தோட கரம் அகற்றுமே*
*மேவனுகோ வலப்பை*
*கலக்கக் கல்லாணி பேரை.*

செங்கழுநீர் மூலிகை, பெண்களைக் கவரும் ஒன்றாகும். கரந்தையானது கல்வியை அறியும்படியாக மூளைக்கு ஆற்றலைத்தரும்.

13. *மெல்லி நல்விரே கொணர்ந்து*
*நல்ல குருவை அரிசி*
*மெல்ல இடித்தே அடுப்பில்*
*புட்டாகவே அவித்து மட்டாகவே அருந்த*

*கெட்டேன் கெட்டேன் எனவே*
*விட்டோடுமே வலிப்பு.*[162]

ஆதனையின் பாலைக்குடிக்க, குற்றங்களால் ஏற்பட்ட தோடசுரம் தீரும். கல்லாணி வேரை இடித்து, புட்டவியல் செய்து பிழிந்து சாற்றைக் குடிக்க வலிப்பு நோய் நீங்கும்.

14. *பன்னாரும் பூவுலகில்*
*நன்னாரி வேருடனே*
*மின்னாரே யேஉணர்ந்து*
*தின்னவே அகல்நோய்*
*சோகை, காமாலை பித்தம்*
*தாகமோடான சர்த்தி*[163]
*வேகமோடான வெப்புக் கூறுவேன்*[164]
*ஓடிவிடும் கொடி வேலியான தொரு*
*கெடியான மூலிகையில்*
*துடியான அட்ட குன்மம்*[165]
*பொடியாகுமே கிரந்தி*

நன்னாரி வேரை இடித்துப் பொடிசெய்து உண்ண, சோகை, காமாலை, பித்தம், நீர்வேட்கை, வாந்தி என்பன தீரும்.

15. *நிர்க்குண்டியின்*[166] *நாமத்தை*
*முக்கியமுடனே உரைக்க*
*கக்கிசத் தலையின் நோயும்*
*திக்கனவே*[167] *ஓடிவிடும்.*

நீர்க்குண்டி மூலிகை, தலைநோயைத் தீர்க்கும். தூதுவளை, காயகற்ப மூலிகையாகும். பித்தம், வாதம், ஈளை, வாந்தி என்பன தீரும். ஆண்மையைப் பெருக்கும்.

16. *தூதுவளையான கற்பம்*
*மேதை*[168] *மொழியாளே பித்தம்*
*வாதமொடு ஈளை சர்த்தி*
*ஈத கலும் தாதுபுட்டி.*[169]

நீர்முள்ளியானது, சிறுநீர் தொடர்பாக வினைகளைப் போக்கும். அத்திப்பழத்தால் கருப்பையில் ஏற்படும் நோய்கள் நீங்கும்.

*17. ஆடாவின் தோடைசயம் மாற்றுமே*
*வெள்ளையெனும் சாரணையில்[170]*
*கள்ளவிழி நோயகலும்.*
*கள்ளவிழி நோயகலும்*
*முள்ளியதில் தோய் வினையில்*
*வள்ளல் போல் தீரும் நிசம்.[171]*

ஆடாதோடையானது இளைப்பு நோயை நீக்கும். வெள்ளைச் சாரணை வேர், விழிகளில் ஏற்படும் நோயைப் போக்கும்.

*18. கூனாத்தி நற்கனியில்*
*மீளா கர்ப்ப நோய்கள்*
*தாளாம லோடுமென்று*
*காளத்திரி நாதர் உரை*
*குப்பை எனுமேனிதனில்*
*உப்பிசங்கள் போக்கிவிடும்*
*அப்பை எனும் கோவை சலம்*
*துப்புறவாய் தானிறுத்தும்.*

குப்பைமேனிக்கீரையானது, வயிற்றின் பொருமலைப் போக்கும். கோவையின் குடிநீர் கழிச்சலை அகற்றும்.

*19. பூவரசுவேர் அனேகம்*
*மேவிவிடுமே கரப்பான்*
*கூவிளையில் மேலெரிவு*
*தவினைகள் ஓடும்*
*தும்பை இரத்த மூலம் அருந்த*
*தம்பனைக்கு முந்துருக்காம்*

*தெம்புடனனே யான்உரைசொல்*
*அன்பர் உரையாகும் இது*[172]

கரப்பான் நோய் பூவரசு வேரால் செய்யப்பட்ட தைலங்களால் தீரும். வில்வம் எரிச்சல், தீவினைகளையும் போக்கும். தும்பை இரத்த மூலத்தை நீக்கும்.

*20. கற்பூர வள்ளியையும்*
*வற்பாக*[173] *உண்பவர்க்கு*
*வெற்பாலை*[174] *குத்தகலும்*
*இப்பாரில் பாண்டு வீக்கம்*
*வர்க்கணையும் பாமிளகு*
*தக்காளியில் போம் கணைகள்*[175]
*அக்கரமும் ஈந்து வல்ல*
*பக்குவமதாகம் தாம்.*

கற்பூரவல்லியை உண்ண, குத்தல் நோய் தீரும். பாண்டு, சோபை, கணை என்பன மிளகு தக்காளியில் போகும்.

*21. உற்றவினை சீந்தியாலே*
*பற்றிவிடும் அத்திகரம்*
*வெற்றிவிடக் கிரந்தி*
*அத்திகுளிர் போக்குமெனச் சொல்*
*ஆடுதின்னாப்பாளை புழு அகற்றுமே.*

அக்ரகாரம், உடலைவன்மையதாக்கும். சீந்தில் அத்திசுரம், விடகிரந்தி, எலும்பைப் பற்றிவரும் குளிர் சுரம் தீர்க்கும். வயிற்றிலுள்ள புழுவைக் கொல்லும் வன்மை உடையதாகும்.

வெட்சியின் சாற்றில் பால் கலந்து குடிக்கச் சூதகநோய்கள் பெண்களுக்குத்தீரும். மகப்பேறு காரணமாக மகளிருக்கு ஏற்படும் புண்கள் தீரும்.

*23. கோட்டான் கிரந்திதனை*
*மட்டுமிதமில்லை யென்று*

சட்டமுனி யார்உரைத்தார்
இட்டமது காணுமென்று

கோட்டம் என்ற கடைச்சரக்கு கிரந்தியைப் போக்கும்.

24. வல்லாரை உண்டுமிகச்
சொல்லாத நற்கணைகள்
இல்லாத மேகம்அறும்[180]
சொல்லாத நோய்அகலும்.

வல்லாரைக் கீரையை உண்ண, கணைகள், மேகநோய்கள் மாறும்.

25. நீலியுத்த வேரில் நவ
கோலியுத்த நஞ்சகலும்
வேலியுத்தமே பருத்தி
ஆலமெத்த வாதமறும்.

எட்டியின் வேர், கொட்டையால் 18 வகையான தோற்பிணிகள் தீரும்.

26. நிலவேம்பினால் சுரங்கள்
மலைவேம்பிலோடும் சளி
தலை வேம்பிலுண்டனேகம்
பிலவேம்பில் கட்டும் வயிறு[181]
குன்றுமணியின் கொடியில்
உண்டு . . . . . டைடனேகமே, வினோதம்
சென்று மூலை மாதர்வந்து
கண்டுகொள்வார்கள் நிசமாய்
ஆட்டியொட்டி வெண் கடுப்பையாற்றுமே.

அவுரி வேரால் கடிவிடம் நீங்கும். வேலிப்பருத்தி என்ற உத்தாமணியால் வாதநோய்கள் தீரும். நிலவேம்பால் சுரங்களும்,

மலைவேம்பால் சளி இருமலும், வேம்பால் வயிற்றிலுள்ள கெடுதல்களும் மாறும்.

குன்றிமணி, கண் கட்டி வித்தைகள் செய்யப்பயன்படும். இதை மகளிர் அறிவார்கள். குன்றிமணியை ஆட்டி எடுத்து உடலில் பூச வெண் கடுப்பு நோய் தரும்.

*27. கொம்பரக்கிலே அனேகம்*
*வம்புகரம் போயகலும்*
*நடக்கியென நாலாயிரத்து நானூற்றுறோடு*
*நாற்பத்து நாலு மூலிவகையைச் சொல்லிக்*
*கிடத்தினேன் கற்பத்துக்கு அடுத்த மூலி*
*கலங்கினா பூரா சொல்லக் கெட்டுக் கெட்டு*

கொம்பரக்கினால் பல்வேறு வகையான சுரங்கள் நீங்கும். 4444 மூலிகைகள் கணக்கிடப்பட்டுள்ளன. கற்ப மூலிகைகளுக்குப் பின் இவற்றைப் பற்றிக் கூறுகின்றேன். தவறு ஏற்படாமல் மருந்துகள் செய்யும் முறைகளை விளக்கமாகக் கூறத்துவங்குகிறேன். இக்கருத்துகளை முத்துக்களை வடமாகக் கோத்தது போலச் செய்தேன். நிகண்டு நூலில் எல்லாவகையான கருத்துகளையும் எடுத்துரைத்தேன். நிகண்டாக (போகர்) நூல் செய்த வரலாற்றை எடுத்து விளக்குகின்றார். இச்சுவடியிலுள்ள சில பாடல்கள் போகர் நிகண்டிலும் வருவது, அடிக்குறிப்பில் சுட்டப்பட்டுள்ளது.

*28. திறந்திட்டேன் சீந்திலுக்கு திரேக சித்தி*
*திறமான மருளுக்கு விரணம் போகும்*
*கறந்திட்டக் காஞ்சொறி சிலேத்துமத்தைப் போக்கும்*
..............................................
*துறந்திட்ட ஆடாதோடை கரத்தைப் போக்கும்*
*சுயமான கருங்காலி குட்டம் போக்கும்*
*நறந்திட்ட வெண், கருங்காலி தானே*
*நாகமது கட்டியே மணிபோலாகுமே.*[182]

சீந்தில் உடல் வன்மைக்கான காய கற்ப மூலிகையாகும். மருள் இரணம் நீக்கும். காஞ்சொறியானது கபத்தைப் போக்கும். ஆடாதோடை சுரத்தைப் போக்கும். கருங்காலியானது தோல் நோய்களைப்போக்கும். இப்பாடலானது போகர் நிகண்டில் வருகின்றது.

*29. மனிதான வேம்புதான் பித்தம் போக்கும்*
*மாபெரிய வேம்புக்கு வாதம் போக்கும்*
*நிணியான நிலவேம்பு கபத்தைப் போக்கும்*
*நீண்ட சர்க்கரை வேம்பு காய சித்தி*
*கொணியான முத்தமது தோடம் போக்கும்*
*குணமான பற்பாடகம் தோடம் போக்கும்*
*விணியான வெட்டிவேர், தாபம் போக்கும்*
*விலாமிச்சம் வேர், பித்த சுரங்கள் போமே.*

வெண்மையான கருங்காலி, மரத்தால் நாகம் உருகி ஓடாமல் கட்டும் மணிசெய்யப்பயன்படுத்தலாம். வேப்பங்கொட்டை பித்தநோய்களையும், வேப்பமரம் வாதநோய்களையும் நீக்கும். நிலவேம்பு கபத்தை நீக்கும். சர்க்கரை வேம்பு, உடலை வன்மையாக்கும். முத்தக்காசு, பற்பாடகம் குற்றங்களைக் களையும். வெட்டிவேரால் நீர்வேட்கை நோயும், விலாமிச்சவேரால் பித்தசுரங்களும் போகும்.

*30. பற்றிட்ட சுக்கதனால் சர்வரோகம் போகும்*
*பண்பாக மிளகுக்கு வாத நாசம்*
*ஏற்றிட்ட திப்பிலிதான் கபத்தைச் சாகும்*
*எளிதான மூலந்தான் கரத்தைப் போக்கும்*
*தேற்றிட்ட செவ்வியந்தான் திமிருக்காதி*
*திப்பிலி மூலந்தனக்குச் சுரங்கள் போமே.*

சுக்கு - பல்வேறு நோய்களைத் தீர்க்கும். மிளகு வாதநோயை அழிக்கும். திப்பிலிமூலம் சுரத்தை அழிக்கும். யானைத்திப்பிலியால் சன்னி என்ற முப்பிணி நோய்கள் நீங்கும்.

*30. போமேதான் கபந்தீரும் கொடிவே லிக்கு*
*பேரான சத்திரத்தின் கட்டி போகும்*
*ஆமேதான் ஆம அக்னி உண்டாகும்*
*அமையாகும் பிணிதனக்கு உப்புக் கட்டும்*
*கோமேதான் கொறுக்காயின் புளித னக்குக்*
*கூர்மையாம் வெடியுப்புக் கட்டி நிர்கும்*
*தேமேதான் சீரகந்தான் பித்தம் போக்கும்*
*சேர்ந்தகருஞ் சீரகந்தான் கிருமி போமே.*

செவ்வியம் திமிர்வாதம் தீர்க்கும். திப்பிலிமூலம் சுரங்களைப் போக்கி, கபத்தைக் களையும். கொடிவேலி சாத்திர பேதியானது உருகிஓடாமல் கட்டும். வயிற்றில் செரிப்புத் தன்மையைக் கூட்டும். இதனால் உப்பையும் கட்டலாம். கொடுக்காப்புளியால் வெடியுப்பைக் கட்டலாம். கருஞ்சீரகம், வயிற்றிலுள்ள பூச்சிகளை நீக்கவும் செய்யும். சீரகம் பித்தநோய்களைப் போக்கும். மூலிகைகளின் தன்மைகளைக் கூறிவந்த ஆசிரியர் தன்னுடைய இரசவாத அறிவை இப்பாடல்களில் புலனாக்குகின்றார். எவ்வகையான மூலிகைகளால் எந்தப் பொருளைக் கட்டலாம் என்பது இங்குச் சுட்டப்படுகின்றது.

*32. போமென்ற சதகுப்பை உதர வாதம்*
*போக்கும் கானகத்தில் சீர கந்தான்*
*சோமென்ற குட்டங்கள் கடிகள் போக்கும்*
*குணமான வெந்தயத்தால் கடுப்பு போகும்*
*தேமென்ற கொத்தமல்லி எரிவு போக்கும்*
*திறமான வசம்பும் அசீரணத்தைப் போக்கும்*
*காமென்ற கடுக்காய்தான் கற்ப மாகும்*
*கடிதான நெல்லிக்கு உட்டினம் போமே*

சதகுப்பையால் வயிற்றுக் கோளாறுகள் தீரும். சீரகம் தோல்நோய்கள், விடக்கடிகளைப் போக்கும். கொத்தமல்லி எரிச்சலையும், வெந்தயம் கடுப்புக் கழிச்சலையும் போக்கும். வசம்பால் செரியாமை நீங்கும். கடுக்காய் காயகற்பமாகும். நெல்லிக்காய் வெப்பத்தைத் தடுக்கும்.

33. நெல்லியொடு தான்றிக்குச் சுவாசம் போகும்
நேரான கடுகுக்குச் சூலை போகும்
வில்லையொடு வெண்கடுகு குட்டம் போகும்
மீறியதோர் மஞ்சளது மந்தம் போகும்
வல்லியதோர் சடாமாஞ்சில் சுவாசம் போகும்
மயங்கியதோர் அதிவிடையம் கிராணி போகும்
கல்லியதோர் கடுகு ரோகணி இன்னாலே
· களிம்பற்று மலசுத்தி காணும் தானே.

நெல்லி, தான்றி போன்ற வகைகள் இரைப்பு நோய்க்கு நல்ல மருந்தாகும். மஞ்சள் வயிற்றிலுள்ள மந்தத்தைக் களையும். சடாமாஞ்சில் இரைப்பு நோயைப் போக்கும். அதிவிடையம் கழிச்சல் நோயைத் தடுக்கும். கடுகு ரோகணி மலக்கட்டைத் தீர்க்கும்.

34. பாரென்ற மஞ்சட்டி இரத்தம் போக்கும்
பதமான சிறுதேக்கு இரத்தம் போக்கும்
காரென்ற கிச்சிலியின் கிழக்கு தன்னால்
கனமான தலைவலியைக் கடிசாய்ப் போக்கும்
கோரென்ற கற்கடக சிங்கி தானும்
கொடிதான சீதஇரத்த அதிசாரம் போக்கும்
யாரென்ற அதிமதுரம் தோடம் போக்கும்
மார்க்கமாய்க் கார்போக வன்மை கேளே.

மஞ்சட்டி, சிறுதேக்கு குருதிப் பெருக்கைத் தடுக்கும். கிச்சிலிக்கிழங்கு தலைவலியைத் தடுக்கும். கற்கடகசிங்கி, அதிசாரக்கழிச்சல், சீதக்கழிச்சல், இரத்தக்கழிச்சல் போன்றவற்றை அகற்றும். அதிமதுரம் குற்றங்களைத் தடுக்கும். கார்போக அரிசியின் வன்மையான செயலைக் கேட்பாயாக.

35. கேளப்பா விடவிருட்டம் நாச மாகும்
கொடிதான அரத்தைக்குச் சுவாசம் போகும்
வாளப்பா வாய்விளங்கம், புழுக்கள் மாயும்
வாலுளுவை அரிசிக்குக் குட்டம் தீரும்

*கேளப்பா சிறியவா லுளுவை என்றால்*
*சிறப்பான தைலத்தில் கந்தி கட்டும்*
*நீளப்பா சயம்தீரும், பசியுண் டாகும்*
*நெடிதான சேங்கொட்டை கடிகள் போமே.*

கார்போக அரிசி, கடிநஞ்சுகளைப் போக்கும். தோல் நோய்களைக் குணப்படுத்தும். அரத்தையால் காற்றுப்பையில் ஏற்படும் தடைகள், இரைப்பு என்பன தீரும். வாய்விளங்கம் குடலில் உள்ள பூச்சிகளை வெளியாக்கும். வாலுளுவை அரிசி தோற்பிணிகளைக் குணமாக்கும். சிறிய வாலுளுவைத் தைலத்தால் கந்தகத்தைக் கட்டுகளாக மாற்றலாம். கந்தகம் உருகி ஓடாமல் கட்டுப்படும். வாலுளுவை அரிசி, இளைப்பு நோயை நீக்கும். பசி உண்டாகும். சேராங்கொட்டையால் செய்த மருந்துகளால் விடக்கடிகள் போகும்.

*36. விடம்போக்கும்கருங்குட்டம் விரணம் போக்கும்*
*மெதுவான அத்தி சுரங்கள் போக்கும்*
*விடம்போக்கும் தாளிசபத்திரிக்கு*
*மெல்லிளைப்பு, சுவாசமொடு இருமல் போக்கும்*
*விடம்போக்கும் முந்திரிகைக் கனியைத் தின்றால்*
*விசேடமுடன் நீர்க்கடுப்பு வெக்கை தீரும்*
*விடம்போக்கும் இதிலுள்ள தினவு போகும்*
*மேலான கிராம்பினுட வன்மை கேளே.*

சேராங்கொட்டையால் ஆன மருந்துகளைக் கருங்குட்டம் இரணம் என்பவற்றுக்குத் தரலாம். அத்தி சுரம் தீர்க்கும். விடங்களையும் அகற்றும். தாளிசபத்திரி இரைப்பைப் போக்கும். இருமல் போன்ற நோய்களைத் தீர்க்கும். முந்திரிக் கனி நீர்க்கடுப்பைப் போக்கும். வெப்பத்தைப் போக்கும் அரிப்பைப் போக்கும். இலவங்கத்தைப் பற்றிக் கூறுகின்றேன்.

*37. மேன்மையாய்ச் சன்னியொடு சுரங்கள் கோழை*
*மிடுக்கான அதிசாரம் பித்தம் போக்கும்*
*வெண்மையாய்ச் சிறுநாகப் பூ தனக்கு*
*வெறுப்பான பித்தமொடு வாதம் தீரும்*

*தன்மையாம் சடாமாஞ்சில் மேகம் தீரும்*
*தன் கந்தமாம் மஞ்சளினால் நீரே கட்டும்*
*கொண்மையாம் கோட்டமது தாகம் தீரும்*
*பொடுமெழுகு தன்னால் கிரணம் போமே.*

இலவங்கத்தால் சன்னி, சுரம், அதிசாரக் கழிச்சல், பித்தம் என்பன தீரும். சிறுநாகப்பூவுக்குப் பித்தம், வாதம் என்ற நோய்களை அகற்றும் தன்மை உள்ளது. கந்தகமானது சிறுநீரைச் சுருக்கும் கோட்டம் நீர்வேட்கையைப் போக்கும். மெழுகு இரணத்தை ஆற்றும்.

*38. விரணம் போம், குங்கிலியம் குக்கிலுக்கு*
*மீறியதோர் சூலைக்குக் குந்திரிருக்கும்*
*தரணமாம் தலைவலி, பீனிசம் போகும்*
*மித, வேதனமாய் கூகைநீர் பிரமேகம் போகும்*
*காரணமாம் கத்தூரி வசிய மாகும்*
*கடிதான அக்கி, மையின் வாதம் போகும்*
*குறணமாம் கோரோசனை யுள்விரணம் போகும்*
*குங்குமப்பூ சிரசில்நிற்கும் வாதம் போமே.*

குங்கிலியத்தால் இரணம் தீரும். தலைவலி, பீனிசம். சூலை என்பன குங்கிலியத்தால் ஆன மருந்துகளால் போகும். கத்தூரி என்ற மான்மதத்தால் அனைவரும் விரும்பும் நிலை உண்டாக (இதைப் பொட்டாக நெற்றியில் வைத்துக்கொள்வார்கள்) இதன் மருத்துவகுணம், அக்கி, வாதம் என்பனவற்றை அகற்றப்பயன்படும். கோரோசனையால் உடலில் உள் இரணம் மாறும். குங்குமப்பூ வாதத்தைப் போக்கும்.

*39. போமேதான் கடைமருந்தின் குணங்க ளெல்லாம்*
*பிரித்துமே வெவ்வேறாய்ப் பேராய்ச் சொன்னோம்*
*ஆமென்றே கடைமருந்துப் பலன்கள் செய்ய*
*அதில்கொடுக்கும் அங்கு பற்பம் கேளு*
*பாமென்ற பரும்பாறை அஞ்சுக் குள்ளே*
*பருத்தம மாவேப்பிலையும் பாதி போட்டுக்*
*காமென்ற நல்லதண்ணீர் கலந்துதான் வாரத்துத்*
*தவறாமல் அடுப்பேற்றி எரித்தி டாயே.*

கடைமருந்துகளின் செயல்களைக் கூறினேன். மருந்துகள் பலனளிக்கப்பற்பமாகும் முறைகளை அறியக் கூறுகின்றேன்.

40. எரித்துமே ஆறுசாம் பொங்கா மல்தான்
நீர்இரட்டி ஒன்றாய், காய்ச்சிக் கொண்டு
அரித்துமே அஞ்சாமல் வடித்துக்கொண்டு
அடுப்பெரித்த சட்டிக்குள்ளே வைத்து
திருத்தமாய்ச் சூதமது பலந்தா னிரண்டு
சுத்திபண்ணிப் பெருஞ்சட்டிக் குள்ளே வைத்துத்
திருத்தமாய்ச் சூளைசெய்து தீபம் பெலாம்
சயமாக நீர்வார்த்து எரித்தி டாயே.

இந்துப்பு, கல்லுப்பு, சோற்றுப்பு, பூநீறு, வளையல் உப்பு போன்ற ஐந்து உப்புகளை சட்டியில் போடவும். சட்டியின் பாதியளவுக்கு வேப்பிலையைப் போடவும். நீர் 8 பங்கு வார்க்கவும். அடுப்பிலேற்றிக் காய்ச்சவும், 6 சாமம் பொங்கிவராமல் தடுத்து, 1 பங்காக ஆனவுடன் இறக்கவும். இத்துடன் இரசம் 2 பலம் (10 கி.) உப்புகளுடன் சேர்க்கவும். சமஅளவு நீர்வார்க்கவும். பின் மேல் மூடி கொண்டு மூடி, தீபாக்கினியாக எரித்துக் கொள்ளவும்.

(குறிப்பு: ஐந்துஉப்பு, சித்த வைத்தியத்திரட்டின்படி தரப்பட்டுள்ளது.)

41. எரித்தெடுத்தால் சூதமதுவும் குருவு மாகும்
இதுவழித்து எடுத்தவுடனே கல்வத் திட்டு
எரித்ததொரு கசாயத்தை விட்டே யாட்டி
வில்லைபண்ணிப் பிராஞ்சாம்பல் உள்ளே வைத்துப்
பிரித்திடாயே புதுஅகலில் வைத்து மூடிப்
பலக்கவே மண்செய்து காய வாத்து
நரித்திடவே நாற்பத்தொரு புடத்தைப் போட
நன்றாகும் சூதமது நயத்து காமே.

இவ்வாறு செய்ய, "குரு" மருந்து கிடைக்கும். குருமருந்தைக் கவ்வத்தில் காய்ச்சின கசாயத்தால் அரைத்து எடுத்துக்கொள்ளவும். வில்லை செய்து, உலர்த்தவும். புது அகலில் பிராயஞ்சாம்பலையும் போட்டு, நடுவில் வில்லையைப் போட்டு, மூடி, சீலை மண் கொண்டு ஒட்டவும். வராட்டிகளால் 41 தடவைகள் புடம் வைக்கவும். இவ்வாறு செய்ய இரசம் மென்மையான பற்பமாகும். இதுவே இரசபற்பம் செய்யும் முறையாகும்.

**குறிப்பு: இரசபற்பம் செய்யும் முறையானது 'மூலிகை மர்மம்' என்ற தலைப்புக்கு ஒவ்வாத ஒன்றாகும். ஏடுகள் மாறியதால் இது ஏற்பட்டிருக்கலாம்.**

*42. இஞ்சியை மெள்ள வாட்டி*
*ஏலமேல் புரணியையும் நீக்கிக்*
*கொஞ்சமாய் . . . . . . . . உப்பு*
*கற்கவே ஊற வைத்து*
*மிஞ்சிய மருந்த துக்கும்*
*மெண்குடல் வலிக்கும் வாயு*
*நெஞ்சுறு புளித்தேப்பம்*
*நிதம்தின்னச் செரிக்கும் அன்னம்.*

இஞ்சியைச் சிறிது தீயில் வாட்டி மேற்றோலை நீக்கவும். உப்பைச் சிறிது போடவும். இதனைப் பயன்படுத்திட, மெல்லிய வயிற்றுவலி வாயு, நெஞ்சைக்கரிக்கும் புளித்த ஏப்பம் என்பன தீரும் உணவு சீரணமாகும்.

*43. கச்சல் நாரத்தங் காயைக்*
*கத்தியால் வளைய மாக்கி*
*மிச்சமாய் உப்புத் தூளில்*
*மிளிர்மஞ்சள் வெந்த யத்தை*
*நச்சவே வறுத்து நன்றாய்த்*
*தூளை நறுந்திட்டு*
*வச்சமில் ஊறு காயாய்*
*அருந்தவே செரிக்கும் அன்னம்.*

இளங்காயாக உள்ள நாரத்தையை எடுத்து, கத்தியால் வட்டமாக நறுக்கிக் கொள்ளவும்,பின் மஞ்சள், வெந்தயம் இவற்றைப் பொடிசெய்து, கலக்கவும். ஊறுகாயாகப் பயன்படுத்தலாம். உணவு சீரணமாகும்.

*44. உப்பில்லாப் பத்தியத்துக்[184]*
*கொன்றுமாகத் தின்றாலும்*
*செப்பிடு முள்ளிக்காய், தேன்*
*செரியதாய் முருங்கைப் பிஞ்சு*
*திப்பிலி இஞ்சித் தூது (வளை)*
*திரிதோடந் தனைக் கொக்கும்.*

உப்பில்லா பத்தியத்திற்கான உணவு முள்ளிக்காய், தேன், முருங்கைப்பிஞ்சு, திப்பிலி, இஞ்சி, தூதுவளை என்பன.

*45. ஒப்பரா . . . . . . . . . . . . . . . மந்தம் தீர*
*உப்பும் வெந்நீரும் கொள்ளே*
*பாலமாந்தம் வெல்லம், சுக்கு*
*பகரென்ன அசமதாகம்*
*சீலமில் தயிர் மந்தத்தால்*

உப்பு, வெந்நீர், மந்தம் போக்கும் வெல்லம், சுக்கு. ஓமம் என்பன இலேசான மந்தத்தைத் தீர்க்கும். இப்பாடல் சரிவர முற்றுப் பெறவில்லை.

*46. ஏலமும் சுக்கும் உப்பும்*
*இசையே மோரில் போட்டு*
*மேலுயர் கரிய வேம்பின்*
*நிலை எலுமிச்சைக் கூட்டி*
*காலமாம் கொட்டையுண்ணக்*
*கற்கண்டு வெந்நீரோடு*
*சாலநெய் கூட்டி, உண்கில்*
*தாகம்போம், சாறு இன்பம்.*

ஏலம், சுக்குபொடி மோரில் இடவும், கறிவேப்பிலை, எலுமிச்சஞ்சாறு சேர்க்கவும். கலக்கிக் கொள்ளவும். ஊறிய பொடியைக் காலையில் வெந்நீர், கற்கண்டுத்தூள், நெய்யில் உண்டு வரவும். நீர்வேட்கை தீரும். இதன் சாறு இனிப்புச் சுவையாக இருக்கும்.



# 5. அகத்தியர் நாடி

## நூலமைப்பும் வரலாறும்

அகத்தியரின் பெயரால் இந்நூலானது அமைக்கப் பட்டுள்ளது. முற்றுப்பெறாதநிலையில் 26 பாடல்களைக் கொண்டு உள்ளது. இந்நூலின் முதல்நூலாக அகத்தியர் 205 என்ற நூல் (பாடல் 15) கூறப்படுகின்றது. இந்நூலானது வைத்திய பூரணம் என்ற பெயரில் உள்ளது. இதனை அத்தியரே இயற்றியுள்ளார். எனவேஅகத்தியர் நாடியும் அகத்தியரின் பெயராலழைக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

72000 நாடிகளையும், வாத, பித்த, கபநாடிகளையும், அவற்றின் நடையையும் எடுத்துக்கூறுகின்றது. மருத்துவர்களை முன்நிறுத்தி, மருத்துவம் தொடர்பான கருத்துக்களைக் கூறுவதோடு, இரசவாதம் பற்றியும் எடுத்துரைக்கின்றது. மேலும் மருத்துவனின் இலக்கணம், நோயறியும் வழிகள், மரணக்குறிகள், நாடிபார்க்கும் முறைகள், நல்லுடலின் இலக்கணம், சுரங்கள் தோன்றும் காரணங்கள், நீக்கும் முறைகள் என்பனவற்றையும் விரிவாக எடுத்துரைக்கின்றது. மேலும் சிறுநீரை வெளிப்படுத்தல், உமிழ்நீரை மாற்றுதல், மலக்கட்டை நீக்குதல் என்ற மூன்று வழிகளை மருத்துவன் கடைப்பிடிக்க, நோயானது தீரும். காலனையும் வெல்ல முடியும் என்று உறுதியாகக் கூறுகின்றார். கலிக்கம், வழலை, நசியம் என்ற மூன்று வழிகளையும் கொண்டு சுரநோயை அகற்றுவது பற்றியும் கூறுகின்றார். கிடைத்த 26 பாடல்களிலும் இந்நூல் தனித்தன்மையுடன் காணப்படுகின்றது. இந்நூலுக்கு உரை இல்லாததால் பதிப்பாசிரியரால் உரை எழுதப்பெற்றுள்ளது.



# அகத்தியர் நாடி

காப்பு

1. *ஆதிதன் பிரிய மான அகமது அருளி னாலே*
*நீதியாம் நாடி நூலை நின்மய வடிவு கொண்டு*
*காதியா . . . . . . . . . . கருத்தினால் துதித்தின்னம்*
*சோதியாம் அறிஞர் தங்கள் துணையடி சரணம்*
*காப்போம்*

அகமது அருளினால் நீதியாம் நாடி நூலை, செய்துள்ளேன். ஒளிமிகும் அறிஞர்களின் துணையான திருப்பாதங்களைக் காக்கும்படி துதித்து இந்நூலைக் கூறத் துவங்குகின்றேன்.

## நூல்

2. *மூலத்தில் எழுபத்தீராயிரம் நாடி*
*முளைத்தெழுந்து வலைபோல முடிந்தோட*
*கோலமாய்ப் பதிமூவாயிரம் நரம்புக்*
*கோர்வாயாம் சூழ்ந்திருக்கும் கூட்டுக் குள்ளே*
*காலனாம் நாடிபத்து, வாயு பத்து*
*கதிப்பதெல்லாம் முற்கோவை பகையி னாலே*
*நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டு*
*நோயிஞ்சு பேர் பிறக்குமென்று நாட்ட நாமே.*

உடலில் அடிப்படையாக 72000 நாடி நரம்புகள் வலைபோலத் தோன்றும். இதில் 13000 நரம்புகள் தொடர்ச்சியாக சூழ்ந்து காணப்படும். இக்கூட்டுக்குள் பத்து வகையான நாடிகள், பத்து வகையான வாயுக்கள் காணப்படும். இவை 1, இடகலை 2. பிங்கலை 3. சுழுமுனை 4. சிகுகை 5. புருடன் 6. காந்தாரி 7. அத்தி 8. அலம்புடை 9. சங்கனி 10. குகு - நாடிகளின் பெயர்கள்.

1. இடகலை - வலக்கால் பெருவிரல் - இடமூக்குவரை செயல்படும்.

2. பிங்கலை - இடக்கால் பெருவிரல் - வலது மூக்குவரை செயல்படும்.
3. சுழுமுனை - மூலாதாரம் முதல் தலை வரை செயல்படும்.
4. சிகுவை - தொண்டையில் இருந்து உணவு, நீர் என்பனவற்றை விழுங்கச் செய்யும்.
5. புருடன் - வலக்கண்ணில் செயல்படும்.
6. காந்தாரி - இடக்கண்ணில் செயல்படும்.
7. அத்தி - வலது காதில் செயல்படும்.
8. அலம்புடை இடது காதில் செயல்படும்.
9. சங்கனி - குறியில் செய்படும்.
10. குகு - அபாநத்தில் செயல்படும்.

வாயுக்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | பிராணன் (உயிர்வளி) | 6. | நாகன் |
| 2. | அபானன் (கரிவளி) | 7. | கூர்மன் |
| 3. | வியானன் | 8. | கிருகன் |
| 4. | உதானன் | 9. | தேவதத்தன் |
| 5. | சமானன் | 10. | தனஞ்செயன் |

உயிர்வளி: 360 சுவாசம் வீதம் நாள் ஒன்றுக்கு 21600 காற்று வெளிப்படும். இது பிராணாமயக் கோசத்தில் செயல்படும்.

அபானன்: மலம், விந்து, சிறுநீர், வியர்வை போன்ற கழிவுகளைத் தள்ளும்.

வியானன்: உறுப்புகளை நீட்டவும், மடக்கவும், இயக்கவும் செய்யும்.

உதானன்: உணவின் சாரத்தை எல்லா உறுப்புகளுக்கும் கொண்டு ஊட்டும்.

சமானன் : மற்ற இயக்கங்களைக் கட்டுப்படுத்தி, எல்லா உறுப்புகளுக்கும் போதிய சத்து கிடைக்கச் செய்யும்.

நாகன் : கண்ணை விழித்தல், மயிர்களை சிலிர்த்தல் உணர்வுகளை எதிரொலிக்கும் நுண்கலைகள் கற்க, இது அவசியமாகும்.

கூர்மன்: இமைகளை மூடித்திறத்தல், கொட்டாவி ஒளியைக் கண்களுக்குத் தருதல், விழிநீரை உண்டாக்கல் என்பன செய்யும்.

கிருகன் : நாவின் சுவை,நீர்த்துவம், உண்டாக்கல் தும்மல், இருமல் போன்றவற்றை உண்டாக்கும்.

தேவதத்தன் : சோம்பல், உடலை முறித்துக்கொள்ளல், சினம் கொள்ளல் போன்ற உணர்ச்சிகளைத்தூண்டும். குதம், குய்யம் போன்ற இடங்களிலிருந்து செயல்படும்.

தனஞ்செயன்: வீக்கம் உண்டாக்கும் மூன்றாம்நாள், தலை வெடித்தபின் நீங்கும்.

நாடி, வாயுக்களின் வேறுபாட்டால் 4448 பிணிகள் உண்டாகும்.

3. *தாதா என்னுரைப்பதற்கே தருமோ ?* இந்தச்
    சாத்திரத்தைக் கடைவிற்கும் சண்டா ளர்க்கே
மாதா, பிதா, மணங்கோணாமல்
    மா பெரியோர் உரைத்த வழி
வேதாந்த மூர்த்திகளை அறிந்து போற்றி
    மேதைமிகு நீதிகளும் அறிந்து போற்றிக்
காதினடி உபதேசம் குருவோதக் கேட்டுக்
    கைதீட்சை பெற்றவனே யோக கத்தன்.

வள்ளல் என்று இந்நூலை வணிகமாக்கும் கீழ் மக்களைக் கூறலாமா ? மருத்துவத்தை வணிகமாக்கலாகாது என்ற மருத்துவ நீதி இங்கு வலியுறுத்தப்படுகிறது. தாய்தந்தை, பெரியோரின் விருப்பப்படியே நடந்துகொள்ளவேண்டும். செவியில் குரு, மந்திரங்களான மறைபொருளை ஓதவும், அவரின் திருக்கரங்களால் திருநீற்றைப் பெற்று தீட்சை அடைந்தவனே யோக சித்தன் குறைகளை நீக்கக் கூறுதல், அறசெயல்களைச் செய்யச் சொல்லல், பகைவர்களை நண்பர்களாகக் கருதல் என்பன மருத்துவனின் இலக்கணமாகும். இத்தகைய செயல்களை மருத்துவன் கடைப்பிடித்தால், அவனுடைய மருந்துகள்

அனைத்துமே சிறப்பானபடி அமைந்து, நோயை நீக்கும். நோயாளிகள் யாராயிருந்தாலும், அவருக்கு மருத்துவம் மனவேற்றுமை பாராது செய்தல் வேண்டும் என்பது தற்கால மருத்துவ உலகின் விதியாகும். இது சித்த மருத்துவத்திலும் கூறப்பட்டுள்ளது.

3. *நீதியாய் அவிழ்தங்கள் சேர்க்கும் பொழுது*
*நிச்சயமாய்ச் சரக்குகளைச் சுத்தி செய்து*
*ஆதி மங்கள வார முகூர்த்தம் கோலி*
*அளவுடனே அவிழ்தங்கள் அரைத்த பின்பு*
*ஓதியே தெய்வ சகாய என்றஞ்சி*
*உயரெழுத்தை உருவேற்றி உண்டை செய்து*
*பாதியாய் அவிழ்தங்கள் இறுகும் போது*
*பரிகார நடக்கைக் குறுதி கேளே.*

மருத்துவநூல்களில் கூறப்பட்டபடி அறநெறியில் மருந்துகளைச் செய்யவேண்டும். சரக்குகளைத் தூய்மைப் படுத்தியே பயன்படுத்தவும். பின் நல்ல வேளையில் மருந்துகளை அரைத்து, செய்யத் தொடங்கவும். இறைவனை வேண்டி, வணங்கியும் மந்திரங்களை ஓதவும். இதனை மருந்துகளை உருண்டையாக உருட்டும்பொழுதும் மருந்துகளை உலர்த்திக் கெட்டியாக்கும் போதும் செய்யவும். நோயாளிகளின் நோய்கள் நீங்கும் வண்ணம், இறைவனை வணங்கவும்.

## மருத்துவர் இலக்கணம்

7. *கேளப்பா, வைத்தியருக்கு ஞானம் வேண்டும்*
*கேட்கும்முன்னே சொல்ல, மெத்தக் கல்வி வேண்டும்*
*ஆளப்பா, நோக்கமெத்த வணக்க முள்ள*
*நற்குணமாய் நெஞ்சுள்ள மனது வேண்டும்*

*சோளப்பா, அவதான சுத்த மாக*
*தீர்க்கமுள்ள தந்திரமும், புத்தியும் வேண்டும்*
*நாளப்பா, இதன்படியே நடந்தா னாகில்*
*நாட்டோர்க்கு நாத்திகன்என் றுரைத்தார், வாதி*

மருத்துவர்களுக்கு நோயைப்பற்றிய அறிவு வேண்டும். அறிவு ஏற்பட, அஃதைப்பற்றிய நூல்களைப்படிக்க வேண்டும். அறிவு ஏற்பட்ட பின் அடக்கமும், பணிவான குணமும் அமைதல் வேண்டும். மருத்துவத்தை மேன்மையுடன் செய்யத் தந்திரம், மந்திரம் போன்றவற்றை கற்றறிதல் வேண்டும். இவ்வாறு மருத்துவர்கள் நடந்து கொள்ள, அவர்களைக் கடவுள் மறுப்பாளர்கள் என்று இரசவாதிகள் அழைத்தார்கள்.

8. *வாதிமகன் வைத்தியந்தான், குணத்தைச் சொல்வேன்*
*வகையாகக் கைபார்த்து, முகத்தைப் பார்த்துச்*
*சோதியுடன் மலசலத்தின் பரிட்சை பார்த்துச்*
*சொல்லிடுவான் வியாதிதனை அறிந்து நன்றாய்*
*சேதிகள்தான் ஒருவருக்குத் தெம்பு சொல்லித்*
*தேகமதைத் தொட்டுமெத்தப் பார்த்துக் கொள்வான்*
*நீதியுடன் கடவுளைத்தான் பணிந்து கொண்டு*
*திண்ணமாய் அவிழ்தவகை இடுவான் கண்டிர்.*

வாதியின் மகனான மருத்துவனின் இலக்கணத்தைக் கூறுவேன், மருத்துவன் நோயாளியின் கையிலுள்ள நாடியைப் பார்க்க வேண்டும். முகத்தைப் பார்க்க வேண்டும். அறிவுடன் மலம், சிறுநீர் பற்றிய ஆய்வுகளைச் செய்தல் வேண்டும். (எண் வகை) தேர்வுகளைச் செய்து பின்னர் நோயாளியின் நோயைக் கணித்து அறிந்து கொள்ளுவான். நோயாளிகளுக்குத் தேவையான உறுதி மொழிகளையும், ஆறுதல் மொழிகளையும் பரிவுடன் கூறுவான். உடல் முழுவதையும் நன்கு தொட்டறிந்து ஆய்வு செய்வான். நடுநிலையில் கடவுளைப் பணிந்து தேர்வு செய்த மருந்துகளை நோயாளிக்குத் தருவான். உடலைத் தொட்டறிதலாவது புலன்கொண்டு அறிதல், பொறியால் அறிதல் எனப்படும் வகையது ஆகும். தற்காலத்தில்

பொறியால் அறிதல் என்பது கருவிகளான வெப்பமானி, மார்பு ஆய்வுக் கருவி , இரத்த அழுத்த ஆய்வுக் கருவியிலிருந்து துவங்கி ஊடுகதிர், நுண் அலை ஆய்வுக்கருவி வரையிலானது ஆகும்.

## நாடி பார்த்தல்

9. *கண்டாயே ஆடவர்க்கு வலக்கரமு மாகும்*
*கருவுடனே பெண்பிள்ளைக்கு இடக்கரம் என்றேன்*
*வெண்டான இடக்கையை வலக்கை யாலே*
*மேலான வலக்கையாலே*
*நண்டாக்க் கைதேய்த்து நெட்டி வாங்கி*
*நாட்டுமூ வரலுக்கு விரலண் டாமை*
*அண்டாமல் நெட்டாவிட்டுப் பாரு*
*அசைவாகும் வாதபித்த சிலேத்தும மாமே.*

நாடியைப் பார்த்தல், ஆண்களுக்கு வலது கையிலும், பெண்களுக்கு இடது கையிலும் ஆகும். பெண்களின் இடது கையை, மருத்துவன் வலது கையால் பிடித்து, நெட்டை வாங்கி, மூன்று விரல்களால் நெல்வெடை விட்டுவிட்டுப் பார்க்கவும். அழுத்திப் பார்க்க வாத, பித்தம், கபநாடிகளின் நடையானது புலப்படும்.

## நாடி நடை

10. *ஆமென்ற புலனுடைய நாடி வாதந்தானே*
*அப்பனே கோழியையுடைய நடைபோ லாகும்*
*வேமென்ற உயிருடைய பித்தந் தானே*
*இரைமேயும் காக்கையுட நடைபோ லாகும்*
*ஓமென்ற சதமுடைய ஐயந் தானே*
*ஓட்டமில்லாமல் மந்தியுட நடைபோ லாகும்.*

அழகான ஐம்புலன்களின் நாடி வாதமாகும். வாத நாடி கோழிபோல நடக்கும். பித்த நாடியின் நடையானது காக்கையின்

நடைக்கு ஒப்பாகும். ஐயநாடியின் நடையானது குரங்கின் நடைக்கு ஒப்பாகும்.

*விளக்கம்* : கையில் உள்ள பெருவிரலின் முடிவுக்கு 1 அங்குலம் கீழ் இடம்விட்டு, மருத்துவர்கள் ஒழுங்காக வரிசை தவறாமல் தங்கள் மூன்று விரல்களை ஒவ்வொரு விரலுக்கு நடுவிலும் ஒரு நெல்லளவு இடைவெளி வைத்து, நடுத்தரமாக அழுத்திப் பார்க்கவும். முதல் விரலில் ஓடுவது அளவை உணர்த்தும். நடுவிரலில் ஓடுவது பித்தத்தின் அளவை உணர்த்தும். மூன்றாவது ஓடுவது ஐயத்தின் அளவை உணர்த்தும் நாடியுமாம். வாதநாடியின் இயல்பு நடை அன்னம், கோழி, மயில் போன்றவற்றை ஒத்தும், பித்த நடையின் இயல்பு ஆமை, அட்டை போன்றவற்றை ஒத்தும், ஐயநடையின் நாடி, தவளை, பாம்பு போன்றவற்றை ஒத்தும் காணப்படும். இம்மூன்று நடைகளிலிருந்து மாறுபட்டுக் காண சந்நி நோய் தோன்றும்.

*11.காணப்பா, வாதமுன்னும், பித்தம் பின்னும்*
*கடையாக ஐயமது தோன்ற வேண்டும்*
*பேணப்பா, பிணியோர்இப் படியே கண்டால்,*
*பிணிதீர்ந்து போச்சுஎன்று புகழ்ச்சி கூறு*
*ஊனப்பா, மூவருமே வரிசை தப்பி*
*ஊனில்லாப் பறவையைப்போல் உயர்ந்து நின்றால்*
*தானப்பா , இப்படியே கண்டோர்க் கெல்லாம்*
*சத்தியமாய் சீவிக்கும் அப்பா உண்மை.*

வாதநாடி முன்பாகவும், பித்தம் நடுவிலும், கபநாடியானது கடைசியிலும் முறையாகத் தோன்றும். இவ்வாறு நோயாளிக்குக் காணப்பட்டால், பிணியானது நீக்கியதாகக் கூறவும். வாத, கபநாடிகள் மாறுபட்டுக் காணப்பட்டால், பிணியானது இருக்கின்றது என அறியவும். "ஊனில்லாப்பறவை" என்பது இரை உண்ணாத பறவையை உவமையாகக் கூறுகின்றார்.

12. உண்மையுள்ள மூவருமே ஒடுக்கமாகி
ஒப்பில்லா வாதமது உலாவி நின்றால்
திண்மைவினை அகற்றவே சியலுண் டாகிச்
செமித்து வயிற்றலே பித்தம் நின்னு
நன்மையாய்க் கணல்மூட்டி தெளிவு தந்து
நயமாக சிவமயதாக்கி விக்கும்
ஆண்மனது கலங்காமல் துணிவு கொண்டு
அருளான அவிழ்தங்கள் அறிந்து மூட்டே.

மூன்று நாடிகளும் ஒன்றுபட்டு இருக்க வாதமானது இயங்கினால், வலிமையான அச்செயலை நீக்கவும். கணிகையரால் ஏற்படுத்தப்பட்டு ஆணிடத்தில் காத்து வைக்கப்படும். வயிற்றில் பித்தம் உண்டாகும். அறிவை ஏற்படுத்தி, நோயாளிக்குத் தக்கபடி விளக்கம் தந்து, நன்முறையில் ஆக்கம் செய்தல் வேண்டும். நோயாளி, மனங்கலங்காமல் துணிவுடன் எதிர்கொள்ள அவிழ்தங்களான மருந்துகளை அறிந்து தரவும்.

13. மூட்டியே மூவருமே மூட மாணால்
மூதண்ட சன்னியும் மூர்க்க மாகும்
மூட்டியே மூவருமே முறுகி நின்றால்
முத்தோடம் செனிக்கின்ற முறைமை யாகும்
கொட்டியே வாதமது குளிர்ந்து நின்றால்
குணமில்லை, மாணத்தின் கூற காகும்
வாட்டமாய் வாதமது மழுங்கி நின்றால்
மரிக்கப்படா மரணமென்று மதிக்க லாமே.

மூன்று நாடிகளும் இயங்காமலிருந்தால் சன்னி என்ற முக்குற்றப் பிணியானது உண்டாகும். இது கடுமையானது ஆகும். பொருத்துகின்ற மூன்று வகை நாடிகளான வாதம், பித்தம், கபம் என்பன மாறுபட முக்குற்றங்கள் பிறக்கும். வாதநாடி, குளிர்ச்சியுடன் இருந்து இருக்க, நோயாளி பிழைப்பது அரிதாகும்.

வாதநாடி மெலிந்து, பொலிவிழந்து இருக்க நோயாளி பிழைக்கமாட்டான்.

குறிப்பு :

வந்திடு மூன்று நாளில் வாதமாம் சந்நி கூடில்
புந்தியை மறந்து வாயால் புலம்பலோ டலம்பல் பண்ணும்
பிந்திய நாலா நாளில் பிடரியில் பின்னல் செய்யும்.

வாத சந்நியின் குணங்கள், அறிவற்றுப் புலம்பல், அலம்பல் செய்யும். நான்காம் நாள் பிடரியில் வலியுண்டாகும் என்பதாக வாத சந்நியைப் பற்றிப் பாடல் கூறுகின்றது. வாத நாடியானது தலைமயிரில் ஊர்ந்து செல்லும் பேன் ஓடுவது போன்று உள்ளடங்கி ஓட, நோயாளி இரண்டு நாழிகையிலும், மஞ்சளாக முகம் மாறுதலும், முகம் பேர்த்தலுமாகிய குறிகுணங்கள் காண, ஒரு நாழிகையிலும் இறப்பான் என்பதாக நாடி நூலில் கூறப்படுகின்றது.[185]

14. *மதிக்கலாம் மூரும் முன்னிட்டுதைத்தால்*
*வாதநோய் தீர்ந்து போகும், மரணமில்லை*
*பதிக்கலா, மூவரும் பின்னிட்டுதைத்தால்*
*பழியாது பிணிமீறும், பகைத்துக் கொல்லும்*
*குதிக்கலாம் வாதமது, குதித்து நீண்டால்*
*கொடுமைசெய்யும், கரங்களுட கூற தாகும்*
*விதிக்கலாம், வாதமது மெலிந்து நீண்டால்*
*வேகமாய், நீண்டகரம் விட்டுப் போச்சே.*

மூவகை நாடிகளும் ஒன்றாக, வாதநோய் தீர்ந்து போகும். மரணமில்லை. கபநாடியானது மிகுந்து ஏனைய நாடிகள் குறைய, நோயாளி பிழைப்பது அரிது. வாதநாடியானது, துடிப்புடன், நீண்டு இருக்க, கடுமையான சுரநோய் என்பது அறியலாம். வாத நாடியானது மெலிதாகவும், நாடித்துடிப்பு நீண்டும் காணப்பட்டால், நீண்ட நாட்களுக்கான சுரம் நீங்கும் என்பதை அறியவும்.

*விளக்கம் :* வாதநாடியானது மேல், கீழ், வலம் இடம் என்னும் நான்கு புறங்களிலும் துடிக்காமல் புழுவைப்போல் ஊர்ந்து கை விரலுக்கும், அறிவுக்கும் கண்டுபிடிக்க இயலாமல் இருக்கும். இந்நிலை காணப்பட்டால் சுரம் ஏற்படும் என்று அறியவும்.

*15. போச்சுதப்பா, நல்லோர்க்கு வந்த நோய்கள்*
*பொல்லாத பாவிகளுக்குப் போகா தப்பா*
*ஏச்சுதப்பா, பகைத்துவந்த நோயகு ணங்கள்*
*இதமறியா, வைத்தியரின் எழுமை கண்டு*
*வாச்சுதப்பா, இந்நூல்தான் வைத்தியருக்கு*
*வகைதொகையாய் வாதிகளை செயிக்கத் தானே*
*ஆச்சுதப்பா, முன்சொன்ன, இருநூற் றஞ்சும்*
*ஆமிந்த இந்நூலுக்கு ஆதி மூலம்.*

நல்லவர்களுக்குப் பிணிகள் தீரும், பொல்லாப் பாவிகளுக்கு நோய்கள் தீராது. நோய்கள், பணத்தைக் குறிக்கோளாகக் கொண்டு செயல்படும் மருத்துவனை ஏமாற்றும். இதனை விளக்க 'இதமறியா' என்ற சொல்லை மூலநூலாசிரியர் பயன்படுத்துகின்றார். இந்நூலானது இரசவாதிகளை வெல்ல மருத்துவர்களுக்கு ஏதுவாகும். இதன் முதல் நூல் அகத்தியர் 205 என்ற நூலாகும்.

*16. மூலமே எழுபத்தீராயிரம் நாடி*
*முளைத்தெழுந்து கழிதடத்தை மொழியொண் ணாது*
*காலனாய் இடருகின்ற நோவுக் கெல்லாம்*
*கருவுடனே கழிமிகுந்த கையிற் குள்ளே,*
*காலமே வாதமது, கழிக்க வேணும்*
*கடுமதியம் பித்தமது, கதிக்க வேணும்*
*மாலையிலே, ஐயமது உதிக்க வேணும்*
*வளமான நாடியென்று மதிக்க லாமே.*

72000 நாடி நரம்புகளால் ஆனதே இவ்வுடலாகும். இப்படிப்பட்ட நரம்புகளின் வளைந்த வழியை

அறியமுடியாமலிருக்கும் அடிப்படையாக இதை அறிந்து கொண்டு, நோய் இன்னவகையது என்பதைக் கணிக்கவேண்டும். நாடியின் நடைகொண்டு, அதை அறியலாம். நன்னிலையில் காலையில் வாதநாடியும், பகலில் பித்த நாடியும், மாலையில் கபநாடியும் பெருகி இருக்கும். இதுவே நல்லுடலின் இலக்கணம் ஆகும்.

17. *காலமே வாதமது மெலிந்து நீண்டால்*
*கதிர்சாயும் பொழுதினிலே, மரண மாகும்*
*பாலமே நடுபித்தம் மெலிந்து நீண்டால்*
*பகர்கதிரோன், உதயமதில் மரண மாகும்*
*மாலையிலே ஐயமது, மெலிந்து நின்றால்*
*மரணமில்லை, வந்தநோய் தீர்ந்து போகும்*
*கூலமாய்ப் பகிர்ந்துநன்றாய், குறிப்ப றிந்து*
*கூறுவார்கள் பெரியோராமே.*

காலையில் வாதநாடியானது மெலிதாக ஒலித்தும் நீண்ட காலமும் இருக்கச் சூரியன் மறையும் முன்னர் மரணம் உண்டாகும். நடுவில் உள்ள பித்த நாடியானது மெலிந்து, நீண்டு நடந்தால், காலைக்குள் மரணம் ஏற்படும். மாலையில் ஐய நாடியானது வலிமை குறைந்து காணப்பட்டால் மரணம் ஏற்படாது என்று மரணக்குறி விளக்கப்படுகிறது.

18. *ஆமேகேள், அடிதுடிதான் அசைந்த சைந்து*
*அசைவாய் துடிதான் புதைந்துதைந்தால்*
*பூமாகேள், அவிழ்தமிட, வியாதி போச்சு*
*புண்டாகப் புனைகின்ற நாடி யாகும்*
*ஓமாகேள், அடிதுடிதான் குறைந்தைந்து*
*ஓரமாகக் கடைதுடிதான் சுரந்து தைத்தால்*
*வீமாகேள், மணி, மந்திர அவிழ்தத் தாலும்*
*மீளாது விதிமுடிந்த நாடி யாமே.*

அழகுடன் பெண்ணே, நீ கேட்பாயாக. நாடியின் அளவு வேகமாக அசைந்து மறைந்து, மீண்டும் தோன்றினால் குணமாகும். மருந்துகளைத் தரவும். ஊறுசெய்யும் நாடியைப் பற்றிச் செவ்வாயைக் கொண்டே பெண்ணே, கேள். நாடியின்

அளவின் வேகம் குறைவாகவும், இறுதியாக நாடியானது வேகமாக நிறைந்து பொருந்தினால், மணிமந்திர மருந்துகளால் குணமடையாது என்பதை அச்சமுடன் மருத்துவர் அறியவும்.

விளக்கம் : [186]

1.வாதம், பித்தம், கபம் என்ற நாடிகளில் காலையில் கனத்தும், மதியம் பித்த நடை இல்லாமலும், மாலையில் கபநாடி மிகுந்தால் ஆறு மாதத்தில் மரணம் ஏற்படும்.

2. மூன்று நாடிகளும் வில்லின் அதிர்ச்சிபோல் மேலுக்குக் கிளம்பி, மிகவும் வேகமாக நடையைக் காட்டினால் இறந்துவிடும் நிலை ஏற்படும்.

3. அறுந்த அரணைவால் துடிப்பது போல் நடையானது காணப்பட்டு, பித்த நாடி மிகக்குறைவாக நடந்தால் மரணம் ஏற்படும்.

4. காலையில் கபநாடியும், மாலையில் வாதநாடியும், பித்தநாடி முறை தப்பியும் இருக்க மரணம் ஏற்படும்.

5. காலையில் கபநாடியும், பித்த நாடி துடிப்பாகவும், மாலையில் வாதநாடியானது காணப்படாமலும் இருக்க மரணம் ஏற்படும்.

6. இடை, தொடை, இதயம் இவற்றின் நாடிகள் விரைவாக ஓடினாலும், முப்பிணி நாடிகளில் ஒருநாடி கைக்குத் தோன்றாமல் மறைந்தாலும், மரணம் ஏற்படும்.

*19.ஆகமாம் நாடிமுற்றும், பாகமொத்து வீழ்ந்தால்*
*அவிழ்ந்தமிடப் பிழைப்பார்கள், அதிட்ட முண்டு*
*சோகமாய் நாடிமுற்றும், பாதத்து வீழ்ந்தால்*
*தொலையாத மரணமென்று சொல்ல வேணும்*
*ஏகமாய் நாடிவிழுந்து வரிலொருவர்*
*எழுந்தாலும் விழுந்தாலும் மரண மில்லை*
*வேகமாய் நாடிமுற்றும், விழுந்த பின்ஐயம்*
*விழுந்தாலும், நின்றாலும் பிழைப்ப தில்லை.*

நாடியானது உடல் முழுவதும் பக்கமாக விழுந்தால், மருந்துகள் தர உடல் நலமடையும். வருத்தமுடன் நாடியானது

முழுமையாக விழுந்தால் தவிர்க்க முடியாத மரணம் உண்டாகும். இங்கு 'பாதம்' என்பது 1/4 பங்காகிய கபநாடியைக் குறிப்பால் உணர்த்துகின்றது. கபம் மிகுந்து வர, மரணம் ஏற்படும். கபநாடியின் அளவு 1/4 பங்கு என மருத்துவ நூல்களில் கூறப்படும். இதை

"வழங்கிய வாத மாத்திரை ஒன்றாகித்
தழங்கிய பித்தம் தன்னில் அரைவாசி
அழுங்கும் கபந்தான் அடங்கியே காலோடில்
பிழங்கிய சீவற்குப் பிசகு ஒன்று மில்லையே"

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

எல்லா நாடிகளும் ஒன்றாக விழுந்து ஏதாவது நாடியானது உயர்ந்து வர, மரணம் நிகழாது. எல்லா நாடிகளும் தளர்ந்து விழுந்தாலும், ஐய நாடியானது தளர்ந்தோ அல்லது நின்று விட்டாலும் பிழைக்க முடியாத நிலை ஏற்படும்.

20. *எல்லையாம் பித்தமுன்னும், வாதம் பின்னும்*
*எழும்பினால் அசாத்திய நாடி யாகும்*
*எல்லையாய் வாதமுன்னும், பித்தம் பின்னும்*
*எழும்பிடவே சாத்தியத்தின் நாடி யாகும்*
*மல்லையாய் வாதமது அமர்ந்து நின்றால்*
*வயிற்றிலே சோறிருந்து மந்த மாகும்*
*கல்லையாய் வாதமது, கதித்து நின்றால்*
*களைப்புண்டாம், தீபனத்தின் நாடி யாமே.*

அசாத்திய நாடியின் இலக்கணம், பித்தநாடி முன்னாலும், வாதநாடியானது பின்னாலும் துடித்தால், நோயானது அரிதில் தீரும். வாதநாடி முன்னாலும், அடுத்து பித்தநாடியானது பின்னாலும் துடிக்க, நோயானது தீரும். வலிமையுடன் வாதநாடி வீற்றிருந்தால், சோறு செரிக்காமல் மந்தம் ஏற்படும். வாதம் குமிழ்போல எழும்பினால், உடல் களைப்புடன், பசியுடன் காணப்படும். வாதம் என்பது காற்றைக் குறிக்கும் சொல்லாகும். காற்று மிகுவதால், குமிழ் ஏற்பட்டு மந்தம் உணர்ச்சி காணப்படும்.

ஒருவனுக்கு வாயுவை உண்டாக்கும் செய்கைகள், வாயு தொடர்பான உணவு, மலக்கட்டு, அளவுக்கு மிஞ்சிய உணவு உண்ணல், ஊண் உணவு மிகுந்து உண்ணல், மாப்பண்டம் மிகுந்து உண்ணல், எருமைப்பால் பருகுதல் என்பனவற்றால் மந்தம் ஏற்படும்.

*21. ஆகமாம், சரீரத்தின் கூரை கண்டு*
*அவனிதனில் மானிடர்க் கறையக் கேளு*
*மாகமாம், வாதத்தின் சரீரக் காரன்*
*வாளிப்பாய், தேகமுள்ள வடிவானவன்*
*யோகமாம், பித்தத்தின் சரீரக் காரன்*
*பருவமாய்த் தேகமுள்ள குணதலாவன்*
*பாகமாம், சிலேத்துமத்தின், சரீரக் காரன்*
*பருவமாய்த் தேகமுள்ள திடியனவன்*

இதயம் உடலின் வீடு போன்றதாகும். இதை மக்களுக்குக் கூறவும். வானத்தை இருப்பிடமாகக் கொண்ட வாத உடலைக் கொண்டவன் அழகான உடலை உடையவன் ஆவான். பித்த உடலை உடையவன், உறுதியானபடி உறுப்புகளைக் கொண்டவன் பக்குவமான ஐயஉடலைக் கொண்டவன், உறுதியானவன் ஆவான். இங்கு வாத உடல், பித்த உடல், கப உடல் என்பதாக மனிதர்களைப் பிரித்துள்ளார்கள். இவர்கள் இராஜஸ குணம், சத்துவ குணம், தாமச குணம் என்ற தன்மையை உடையவர்களாக மருத்துவ நூல்களில் கூறப்பட்டுள்ளனர்.

*22. நாவனாம் சரீரத்தின் சரீரக் காரன்*
*நாதமாம் குரல்நீண்டு, பேச்சு வண்ணம்*
*பாவனாம் பித்தத்தின் சரீரக் காரன்*
*பதறியே, குரல் விண்டு, துடியாம் பேச்சு*
*கோவனாம் சிலேத்துமத்தின் சரீரக் காரன்*
*குமறியே குரல்விண்டு இடியாம் பேச்சு*
*மூவனாம் சமமித்த சத்தமில் லாமல்*
*மொழிந்தமற்ற சத்தமெல்லாம் பத்த மாமே.*

மன்மதனைப் போன்ற உடலை உடையவன், குரல் ஓங்கி ஒலித்தும், நீண்டதாகவும் காணப்படும். இது வாத உடலை உடையவனின் இலக்கணமாகும். வீமனைப் போன்று உடல் வலிமையைக் கொண்டவன், மூங்கிலிலிருந்து ஒலி வருவது போன்று பலக் குரல் ஒலி இருக்கும். வேகமாகப் பேசுவான். இது பித்த உடலை உடையவனின் இலக்கணமாகும். கப உடலைக்கொண்டவனின் இலக்கணம், குரல் ஒலி வேகமாகவும், இடியோசை போன்று வலிமையுடன் காணப்படும். அரசனைப் போல் ஆணையிடுவான். வாத உடலை உடையவனைத் தனித்துக் காட்டியது மிகவும் நயமாக உள்ளது.

## சுர இலக்கணம்

*23. ஆமப்பா, வாத சுரமலந்த*
*அங்கமெல்லாம், நொந்துபுண்ணாய்க் குளிருண் டாகும்*
*பூவப்பா, பித்தசுரம் சிவந்த*
*பித்துண்டால் தேகமுற்றும் எரிப்புண்டாகும்*
*காமப்பா, ஐயசுரம்* உமித்தம் பித்து,
கணுஎலும்பைக் குடைந்து கபநீர்உண் டாகும்
ஓமப்பா, இவைமூன்று .......... வேறில்லை
ஒருகரம் வாயுவினால் உதித்த வாறே.

வாத சுரம் வந்தால் உடல் நொந்து புண்ணாக வலிக்கும். குளிர் நடுக்கம் உண்டாகும். பித்த சுரத்தில் மனம் மயக்கமடையும். சிவப்பாக உடலில் எரிச்சல் ஏற்படும். பித்தத்தை ஐயசுரம் அழித்து, கணு எலும்பைக் குடைந்து, கபநீரை ஏற்படுத்தும். இவைகள் மூன்றும் வேறில்லையாம். வாதசுரம் ஏற்பட வாயு காரணமாகும்.

*24. வாறாக ஊறிக்கொட் டாவி, கொண்டால்*
*வாதத்தால் வந்தசுரம், வலுத்த தாகும்*
*பேறாக வா . . . . . . . . . . . கண்டால்*
*பித்தத்தால் வந்தசுரம், பலத்த தாகும்*

*கூறப்பா சளிஇருமல் சினுக்குண் டானால்*
*குடைச்சலாய் வந்தசுரம் கோர்வை யாகும்*
*முரப்பா, இவை வாயுவால் முச்சுரங் களாகும்*
*மூர்க்கத்தையடக்கு, அடக்கவல்லார் முறைகூறு.*

**வாத சுரத்தில் கொட்டாவியானது வந்தால் அது வலிமையான நோயாகும். வாய்ப்பாகப் பித்த சுரத்தில் . . . . . . . . வந்தால், அது வலிமையானதாகும். சளி, இருமல், குடைச்சல் முதலிய குறி குணங்கள் வர, சுரம் தொடர்ந்து வரும். இவை வாயுவால் வருவதாகும். இவற்றின் வன்மையை அழித்து நோயைத் தீர்க்கும் மருத்துவத்தைக் கூறுகின்றேன்.**

*25. கூறுமே, உரப்பான கலிக்கம் பட்டால்*
*குலைந்துநின்ற, சுரம்பாதி ஒடுங்கிப் போச்சு*
*பாருமே வழலைச்சத்தி வாங்கிப் போட்டால்*
*படர்ந்துநின்ற சுரமாதி ஒடுங்கிப் போச்சு*
*காருமே ஆக்கிராணப் பொடியைப் போட்டால்*
*கடந்துநின்ற சுரம்பாதி ஒடுங்கிப் போச்சு*
*தீருமே, கருமசுத்தி மூன்றும் செய்தால்*
*சடத்திலுள்ள நோவையெல்லாம் திருப்பு வோமே.*

**வெற்றியைத் தரும் கண்மையை இட சுரம் பாதியளவு குறையும். வழலை என்ற மருந்தைப் பயன்படுத்த, சுரம் நீங்கும். நசியாகப் பொடியைப் போட சுரம் பாதியளவு நீங்கும். செய்யும் மருத்துவச் செயலை மனம், மொழி, மெய் என்ற மூன்று வகையிலும் நேர்மையாகச் செய்ய, உடலில் உள்ள வலியானது நீங்கும்.**

*26. ஓமென்ற மலக்கட்டைக் கழிக்க வைத்தால்*
*உடலிலுள்ள வாதையெல்லாம் ஓடிப் போச்சு*
*தாமென்ற சிறுநீரைத் தெளிய வைத்தால்*
*சடத்திலுள்ள வேகமெல்லாம் தணிந்து போச்சு*

*. . . . . . உமிழ்நீரை முறிய வைத்தால்*
*கூட்டிலுள்ள பகையெல்லாம் குலைந்து போச்சு*
*கோமென் றிவைமூன்றும் களங்க மற்றால்*
*கொல்லவந்த காலனையும், வெல்ல லாமே.*

மலக்கட்டு அகல, உடலில் உள்ள வேதனை யாவும் தீரும். சிறுநீரைத் தெளிய வைத்தால் உடலில் உள்ள வேகம் தணியும். உமிழ்நீரை முறியவைத்தால் உடலில் உள்ள பகை யாவும் தீரும். இம்மூன்றும் நன்னிலையடைய, பிறவியை வெல்லலாம்.



## அடிக்குறிப்புகள்

1. சமணமும் தமிழும் - மயிலை சீனி. வெங்கடசாமி.
சை. சி. நூ. கழகம், 1970.
2. இலக்கியமும் கல்வெட்டுகளும்
டிவி. சதாசிவபண்டாரத்தார், மணிவாசகர் நூலகம், 1977.
3. பழனி தலபுராணம், பாலசுப்பிரமணியக்கவிராயர், 1914.
4. சமணமும் தமிழும் - மயிலை சீனி. வெங்கடசாமி.
5. அகத்தியர் 100 - ரங்கராசன் (ப. ஆ.) சரசுவதி மகால் வெளியீடு .
6. தமிழ் வரலாறு, மு. இராகவ அய்யங்கார்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.
7. தமிழ்ப்புலவரகராதி, ந. சி. கந்தையா பிள்ளை,
ஆசிரியர், நூற்பதிப்புப்பழகம், சென்னை, 1952.
8. அகத்தியர், வரலாறு, அ. சிதம்பரம், கழகம், 1950, பக். 57.
9. அகத்தியர்கள், வித்துவாந் ஆ. சிவலிங்கனார்,
தமிழ்க்கல்லூரி, மயிலம்.
10. அகத்தியரும் குமரிமாவட்டமும், இந்தியப் பல்கலைக்கழகத்
தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலைப் பல்கலைக்கழக
ஆய்வுக்கோவை 1, 1988. பக். 776.
11. செங்கற்பட்டு மாவட்டம், சொ. ம. லெ. 1953.
12. திருப்புல்லாணி தலவரலாறு, சேதுபதி தேவஸ்தானம், 1968.
13. இந்திய பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை -
பகுதி 1, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1988.
14. இக்காய் - இன்னதென்று தெரியவில்லை.
15. கேசர் - இதுவும் இன்னதென்று தெரியவில்லை.
16. பொருள் எதுவும்
17. ஏர் பொருத்து
18. கூர் பொருந்தும்
19. பகையாதே
20. பதினாறு பிணி நீக்கி
21. நூல் உரைத்து
22. விருத மற்ற பாகம் சொல்லி
23. நூல் உரைத்து

24. மனதறிந்து
25. கூறாதே ஊமை என்ற பேர்தானேது
26. குருவருளால் அடிமுடியும் தெரிந்து
27. அரியென்ற
28. நன்று தீ இடது கையினால் சத்தி
29. கூறாத ஊமையது
30. எழுத்தின்
31. கூறாத ஊமையது விராட்டு வாகும் அடுத்த
32. குருவடியைப் பணிந்தருவர்களுக்கு அடிமுடியும் தோன்றும் இவ்வரிகள் மாறியுள்ளது.
33. குணமான
34. தேகமுறு
35. பற்றும்
36. சக்தியாகும்
37. தேகமுறும்
38. காணும்
39. சிரசுதுவும்
40. நூல் கொடுத்து
41. முறை தவறாமல்
42. பேர்தான் ஏது
43. கயிறுதான் ஏது
44. பையேது
45. தளராமல்
46. பழுதுவராமல்
47. அடித்திருந்த
48. ரன்
49. பையதுவும் கயிலை என்பீர்
50. தவறாமல் சாத்திரத்தின் பயனறிந்து
51. உவர் ஆனதேது
52. அதன் நடுவே
53. சலாகைக்கோலும்
54. நிறைகின்ற
55. நெளியாத
56. வழுத்து வீரே

57. உற்றரச

58. மூவராகும்

59. சத்தி

60. நிறைகின்ற

61. தடவலாகும்

62. நெகிழாத மண்ணு

63. வங்கச்செப்பு

64. அறிந்து பார்த்து

65. சகலநூலின் சாரம்பார்த்துச் சொல்லு

66. அரன்தேவி

67. பொரியான

68. வங்க ஈசன் வந்து

69. தெரியாவிட்டால்

70. அப்போது

71. செப்பேது

72. கஞ்சமொடு தாம்பிரலோகம் சொல்லு

73. கருவான பித்தளை தராவும் சொல்லு

74. வெஞ்சமறச் சாத்திரங்கள் எடுத்துப் பேசு

75. வேதாந்த சித்தாந்த இரண்டும் சொல்லு

76. நன்று நீ உன்னுடைய விரது வாங்கே

77. 14 ஆம் பாடலாக இப்பாடல் பதிக்கப்பட்டுள்ளது

78. வஞ்சமென்ற லோகத்தில் வாயுவைச் சொல்லு

79. வருதாழை பிருதுவி நிறத்தைச் சொல்லு

80. வெஞ்சலென்ற தராவுக்கு அப்பின் ஆறும்

81. விதமான நிறத்தையெல்லாம் விளங்கப்பார்த்து

82. அ. உரைத்திடீரே

83. இப்பாடல் பதிப்பிலிருந்து மாறுபட்டுள்ளது.

வாதுரைக்கும் வைத்தியரே சொல்லக் கேளு
    வைத்தியருக்குத் தலைமூன்று கண்கள் மூன்று
நீதமுடன் சாரமொடு திரேகம் ஆறு
    நிலவரமாய்ப் பாதைபத்து நாலுண்டு என்பார்
ஆதரவாய்க் கண்டுவந்தேன் வைத்திய னாவான்
    அல்லாமல் செய்துவிட்டால் மட்டையாவான்
தேசமெல்லாம் மனிதரையும் அவனே கொலவான்
    செத்தசவம் போலவும்செய் மருந்து பொய்யே.

84. கௌரியோ தேயுவாகும்

85. வெள்ளையோ வாயுவாகும்

86. பச்சையுட மாட்டலாகும்

87. செகத்தில் பைரே

88. சத்தியதை செய்து, நீர் எடுத்துக்கொண்டு

89. மகோதங்கள்

90. வரம்பட்ட

91. மெய் இளைப்பு

92. தோலாக

93. போரத்தை

94. அரை உண்டை

95. தொல்வேன்

96. நெல் கியைக்கு

97. சொரி கிரந்தி, அரிகிரந்தி

98. நயமாக வயிற்றுவலி சூலைக் கெல்லாம்

99. ஓயடா கருப்புக்கட்டி தன்னிலே தர

100. மிரண்டு

101. பொறுக்காத

102. சாற்றில்

103. தவிர்ந்து

104. காகுமே

105. பித்தம், காமாலை, விடபாகம்

106. கருப்பஞ்சாறு

107. வாகாக

108. உய்யும் படி

109. செய்யுமே அவை செய்து

110. கொன்று விடும்

111. வாகாம சித்தர்

112. ஆறுதரம்

113. தினுசுஞ்சூ

114. வாதமாய்க்கூட்டி

115. வேரிளக வைத்து

116. இரவியல்

117. கூட்ட

118. பிளவைகளும்

119. தேடரும் வீரமென்று

120. தேவாதி இலிங்க மிரண்டு

121. மூலமாய் மூன்று வில்லை

122. காய வைத்திடுமே

123. கட்டு

124. தீயில் புடம் போடு

125. புரைவிலகும்

126. திரிகை வைத்து

127. கொம்மகை முகத்திலேற்றே

128. சன்னி தீரும்

129. குட்டம் தீரும்

130. இவ்வரிகள் மாறுபட்டுள்ளன
கோர்த்திடில் கண்ட மாலை குன்மங்கள் முதலாய்த் தீரும்

131. ஏற்றிடில் வியாதிக் கெல்லாம்

132. ஏழுநாள் பத்தியமே

133. உண்பவர்தன்

134. சித்திர புரத்து

135. கொணர்ந்து

136. சத்தாகிலும்

137. மந்தமும்

138. பொருத்த

139. வேருரைக்கில்

140 அம்பலத்து

141. குழைத்துத்தின்பவர் வயிற்றுளைபோம்

142. மதம்

143. கரிய மிளகோடுண்ண

144. அவர்

145. சங்க நிலை

146. உண்ட காலத்தில் மேகமெல்லாம்

147. நழுவாம லேயரைத்து

148. சித்தமதில் வாதமெல்லாம்

149. சத்திலதோடு மிதமற்ற விட சூனியமும்

150. கொத்தானும் வேர்ச் சமூலம்
மெத்தவே ஆவலாயுண்
கட்டுகள் மலத்துச் சீதம்
விட்டுவிடுமே இடுப்பில்

சூட்டு வலி தானுமது
திட்டமுடன் செய்யகலும்

151. முக்கான நாயின் வேரை

152. சுய ரூபமாய்

153. தலைவலி

154. மெள்ளவே

155. வயிற்றேடனில் (வயிறு + சேடனிலே)

156. நிற்கு

157. நாற்றமொடு

158. ஆத்திவிடுமே சுவாசம்

159. பார்த்துப் பதமாய் உனர்வை

160. பேர் வழுத்தி

161. உவமாகவே உணவை
முழு பாடல் பேதம்

162. பங்கையஞ்செய் நீளுலகில்
சங்கமற்ற மூலிகை நூல்
மங்கை பாகர் சொன்னபடி
சிங்கார மாயன் உரைத்த
ஆடாதோடை தோடம் அகற்றுமே

163. கொல்லன் பகையாளிவேரை
மெல்லக் கெல்லியே கொணர்ந்து
நல்ல குருவை யரிசி
மெல்ல இடித்தே அடுப்பில்
பிட்டாகவே அவித்து
மட்டாக அருந்த
கெட்டோம் கெட்டோமென்று
விட்டோடும் மேல் வலிப்பு

164. இப்பாடல் பாடபேதம் 31 இல் வருவது

165. அகற்றி

166. வெப்புத்தோடம் போகப் பிரமியம் தீரும்

167. கொடி வேலியானதொரு கொடியான மூலிகையில்

168. நெக்குன்றி

169. அக்கணத்திலே

170. வேத

171. தாகமொடு

172. பாடல் மாறியுள்ளது

சம்பிரமுடனே கவிழ்தும்பை எனு மூலியது
வம்புடு இரத்தமூலம் தம்பனமதாகும் சொன்னோம்

173. பாடல்வரிகல் மாறியுள்ளன
முள்ளியின் சுருக்குரைக்கு
பல்லின் வலிதான் அகலும்

174. பாடல் மாறியுள்ளது.

175. வைப்பாக

176. வெப்பாரி

177. சூரியன்தன் காந்திதனில்
சேரும் வெப்புச் சாந்தியதோம்
கடைசி வரிகள் மாறியுள்ளன.

178. பாடல் மாறியுள்ளது
"கொட்டையெனும் கரந்தை
திட்டமுடனே உதக
மெட்டினில் வடித்திருந்த
வெட்டையதை அகலும் சொன்னேன்"

179. பாடல் மாறியுள்ளது.
கொம்பரக்கிலே அநேகம்
வம்புசுரம் போய் அகலும்

என்பதுறும் காயசித்து
இன்பமுடன் அருந்த
பாசி தன்னில் நார்க்கிரிச்சல்
தோமொடு சூலையறும்
ஆசைக்குத்து பாலைதனில்
மாச்சு விடுமே பாலை

180. பின்வரும் பாடல்கள் மாறியுள்ளன.
வன்னியில் ஊது வயிறு
உண்ணத்தீரும் என்று மிகச்
சின்னியிலைச் சிறு
தன்னில் வாரண அகலும்
கோழியவரை தனில் நீவி
சுழிகளோடு ஈளை வயிறு
ஊதல் வெப்புக் கோழை
மாந்த காசம் அறும்
சுண்டையதில் வேர்பொடியின்
மண்டையதின் நீர்அகற்றும்
எனசொல்லிய கடிகள்
வண்டுகடியால் ஓடும் பாதிரிவேர் அனேகம்
சாதுரியமாக ஒலிர் நாதருள் காணவென்று
ஓது முனிவர் சொல் ஆற்றவரி அட்டகுன்மம் மாற்றுமே.

181. பாடல் வரிகள் மாரியுள்ளன.
விச்சுயெனு மூலிகையில் பச்சைநல்ல பால்கறந்து
கொச்சையுள்ள மாதருக்குக் கச்சக்கத ஆசையுண்டு

182. வெல்லாத மேகம்

183. இலை வேம்பில் கட்டுவயிர்
தலை வேம்பிலுண்ட அனேகம்

184. அத்திவேர் வயிறுக் கடுப்பை ஆற்றுமே
"திறந்திட்டேனே சீந்தலுக்கு தேகசித்து
திறமான மருளுக்கு விரணம் போகும்
கறந்திட்ட காஞ்சொறி சிலேத்மம் போகும்
கடியபெரும் காஞ்சொறி சிலேத்மம் போகும்
துறந்திட்ட ஆடாதோடை கபத்தைப் போக்கும்
சுயமான கருங்காலி குட்டம் போக்கும்
நறந்திட்டவன் வன் கருங்காலிக்குத் தானும்
நாகமது கட்டியே மணி போலாகுமோ"

- போகர் கருக்கிடைநிகண்டு

................

"நடக்கினேனே நாலாயிரத்து நாற்பத்து நான்கு விதமான மூலிதன்னைக்
கடக்கினேன் கற்பத்துக்கடுத்த மூலி
காலங்கி நாதர் சொல்லக் கேட்டு
முடக்கினேன் முத்துப் போல் ஒருகயிற்றில் கோர்த்தேன்
முதுமையாய் நிகண்டுக்குன் திறந்திட்டேன்."

- போகர் நிகண்டு - 87

185. பாடல்கள் 44, 45 வடிவம் சிதைந்துள்ளன.

186. நாடி மர்ம மூலமும் வடிவேலர் விரிவுரையும்,
மாங்காடு வடிவேலு முதலியார் பக். 47

நாடி மர்ம மூலமும் வடிவேலர் விரிவுரையும்
மாங்காடு வடிவேலு முதலியார்
இராசன் எலட்ரிக் பிரஸ், சென்னை. பக். 33.

187. நாடி மர்மம் மூலமும் வடிவேலர் விரிவுரையும், மாங்காடு
வடிவேலு முதலியார், இராசன் எலெக்டிரிக் பிரஸ், சென்னை.

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | ,, | ,, | பக். | 102 |
| ,, | ,, | ,, | பக். | 120 |
| ,, | ,, | ,, | பக். | 121 |
| ,, | ,, | ,, | பக். | 141 |
| ,, | ,, | ,, | பக். | 146 |

188. நாடி மர்மம் மூலமும் வடிவேலர் விரிவுரையும்
மாங்காடு வடிவேலு முதலியார் - இராசன் எலெக்டிரிக் பிரல்,
சென்னை. பக். 16.

# செய்யுள் முதற்குறிப்பு

(எண்: பாடல் எண்)

## அகத்தியர் கும்மி



## 2. அகத்தியர் வைத்திய தர்க்கம்-25



## 3. அகத்தியர் பச்சை-16



## 4. அகத்தியர் மூலிகை மர்மம்

## 5. அகத்தியர் நாடி



*****

# சொல்லடைவு

(எண் : பாடல் எண். பெயர்: நூற்பெயர்)

| | எண் | நூற் பெயர் |
|---|---|---|
| | அ | |
| அரக்கு | 32 | மூலிகை மர்மம் |
| அரத்தை | 40 | ,, |
| அரிதாரம் | 1 | பச்சை 16 |
| அத்திரம் | 2 | மூலிகை மர்மம் |
| ,, | 41 | ,, |
| அக்ரஹாரம் | 24 | ,, |
| ,, | 8 | கும்மி |
| அயத்தரா | 16 | மூலிகை மர்மம் |
| அதிமதுரம் | 8 | ,, |
| அதிகாரம் | 42 | மூலிகை மர்மம் |
| அதிசூலை | 7 | ,, |
| அத்திகரம் | 2, 41 | ,, |
| அட்ட ரோகம் | 16 | பச்சை 16 |
| அக்கினி | 43 | மூலிகை மர்மம் |
| அலிழ்தம் | 4,5,6,8,19 | நாடி |
| அக்னி | 36 | மூலிகை மர்மம் |
| அதிலிடையம் | 38 | ,, |
| அதிகாரம் | 39 | ,, |
| அதிமதுரம் | 39 | ,, |
| அசீரணம் | 37 | ,, |
| | ஆ | |
| ஆவாரை | 12, 11 | பச்சை 16 |
| ,, | 8 | கும்மி |
| ,, | 5 | மூலிகை மர்மம் |
| ஆடாதோடை | 33 | ,, |
| ,, | 18 | ,, |
| ஆடுதின்னாப்பாளை | 24 | ,, |
| ஆதளை | 14 | ,, |
| ஆலத்திபூரம் | 13 | பச்சை 16 |
| ஆக்கிராணம் | 25 | நாடி |

## ஏ



## க

## வெ



## வே





# பொதுவியல்

## சித்தமருத்துவம் தொடர்பான செய்திகளின் திரட்டு

| | |
|---|---|
| பிராணவாயு | நீலநிறம் |
| தனஞ்சயன் | நீலநிறம் |
| அபானவாயு | பச்சை நிறம் |
| சுயம்பானம் | கறுப்பு நிறம் |
| அக்னி வாயு | சிவப்பு நிரம் |
| கூர்ம வாயு | சிவப்புநிறம் |
| வியான வாயு | பால் |
| உதான வாயு | மின்வண்ணம் |
| நாகன் | பொன்னிறம் |

- வண்ணம், ஐ. ஐ. டி.எஸ், சென்னை
*1983, பக்கம் 471*

### நாடியின் தேவதைகள்

*1. சூரியன் 2. சந்திரன் 3. உருத்திரன் 4. இந்திரன் 5. வருணன் 6. ஈசுரன் 7. பிர்மா 8. பிருத்துவி.*

"மணிக்கு 2 1/2 நாழிகையாக 60 நாழிகைகள் ஒரு நாளைக்கு உள்ளன. 60 நாழிகைக்கு 21,600 சுவாசம் நடைபெறுகின்றது. சுவாச கேந்திரம் 12 விரலளவு உள்ளது. இதில் 21600 சுவாசத்தில் 14,400 உள்ளுக்குச் செல்லுகின்றது. 7,200 வீணாகப் போகின்றது".

Hand book of Indian Medicine,
T. G. Ramamoorthi Iyer, Erode, Pg.71.

## நாடிகளின் வகைகள்

1. தீவிர நாடி 2. துள்ளு நாடி 3. வன் நாடி 4. அபல நாடி
5. நெருங்கிய நாடி 6. நிறை நாடி 7. கதி நாடி 8. மென் நாடி
9. தடங்கு நாடி 10. இடைவிடு நாடி 11. தளம்பு நாடி
12. ஒழுங்கு நாடி 13. கூர் நாடி 14. நுணா நாடி 15. கம்பி நாடி
16. மரண நாடி 17. விகற்ப நாடி 18. சந்நி நாடி 19. பூத்த மங்கை நாடி.
20. ஒழுங்கு நாடி 21. உதர நாடி 22. இரட்டை நாடி
23. குதிரை ஒட்ட நாடி 24. தெறிக்கு நாடி

- The greatness of Siddha Medicine,
Dr. V. Balaramaiaha, pg. 48

1. குரு நாடி 2. பஞ்ச நாடி 3. திரட்டு நாடி 4. பூத நாடி

–18 சித்தர்கள் நாடி சாத்திரம்

## நாடிகள்

1. இடைகலை 2. பிங்கலை 3. சுழுமுனை

## நாடிகளின் விளக்கம்

'நாடிகள் 360 ஆக உள்ளன. ஒரு ஆண்டு அமைகின்றன. எல்லா நாடிகளும் மூன்று இடங்களில் இணைகின்றன. மபடிச்சு என்ற பொருளில் இவைகள் 'கண்டம்' எனப்படும். 1. அக்னி கண்டம் 2. சூரிய கண்டம் 3. சந்திர கண்டம் என்று மூன்று இணைப்புகள் உள்ளன. மூன்று முடிச்சுகளில் உள்ள அழுக்குகளை நீக்குதல் திரிபுரம் எரித்தலாகும்.

| | | |
|---|---|---|
| 1. மூலாதாரம் | மணிபூரகம் | அக்னி கண்டம் |
| 2. சுவாதிட்டானம் | அனாகதம் | சூரிய கண்டம் |
| 3. விசுத்தி | ஆக்ஞை | சந்திர கண்டம் |

1. அக்னி கண்டம் நான்முகம்
2. சூரிய கண்டம் திருமால்
3. சந்திர கண்டம் உருத்திரன்

-பண்டைத் தமிழ் இலக்கியங்களில் சிவன்
ச. இரேணுகா, அகத்தியர் அச்சகம்,
சென்னை, 1989

## நாடிகள்

ஒப்பார் பிராண அபானு தானுடன்
தப்பார் வியானந் சமானநே - இப்பாலும்
நாகன் தனஞ்செயன் கூர்மன் கிருகரன்.
தீதில்லா தேவதத்த னே

உரை: பிராணன், அபானன், விபானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தனஞ்செயன், தேவதத்தன் என்பன உடலில் உள்ள பத்து விதமான வாயுக்கள் ஆகும்.

வாச நாடி - அரசன்
பித்த நாடி - அமைச்சன்
கப நாடி - படைத்தலைவன்

-தேரையர் நாடி நூல்

## நாடியில் மூச்சு விவரம்

| | |
|---|---|
| மூலாதாரம் | 600 |
| சுவாதிட்டானம் | 6000 |
| மணி பூரகம் | 6000 |
| அனாதகம் | 6000 |
| விசுத்தி | 1000 |
| ஆக்ஞை | 1000 |
| நாநாந்தம் | 1000 |
| | 21,600 |

## நரம்புக் கூட்டங்கள்

| | |
|---|---|
| தலை | 15,000 |
| செவி | 3,300 |
| கண் | 4,000 |
| மூக்கு | 3,349 |
| பிடரி | 6,000 |
| கண்ட | 5,000 |
| கைகள் | 3,000 |
| முண்டம் | 2,170 |
| இடை | 8,000 |
| விரல்கள் | 3,000 |
| இலிங்கம் | 7,000 |
| மூலம் | 5,000 |
| சந்துகள் | 2,000 |
| பாதம் | 5,150 |
| | 72,000 |

-சித்த மருத்துவம், டாக்டர் ச. ஆறுமுக நாதன்,
சண்முகானந்த புத்தக சாலை, சென்னை.

## நாடிகள்

- திருமூலர்

'ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிணிக்கும் கணக்கறிவா ரில்லை
காற்றைப் பிணிக்கும் கணக்கறிவா ளராக்குக்
கூற்றை உதைக்கும் குரியது வாமே'

'புறப்பட்டு புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நிர்மல மாக்கில்
உறுப்பு சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே'

'இவ்வகை நரம்புகள் இரண்டில் இடப்புற உறுப்புகளை இயங்கச் செய்யும் நரம்பினை இடகலை என்றும், வலப்புறமுள்ள உறுப்புகளை இயங்கச் செய்யும் நரம்புகள் இடப்புற நரம்பின் பின்புறம் சென்று சுழன்று மாறி வந்தால் பின்கலை என்றும் இடகலையும், பின்கலையும் (கத்தரிக்கோல் மாறுவது போல் ) சுழன்று வருமிடத்திற்குச் சுழுமுனை என்று பெயர் அமைந்தது. பின்கலை என்பது பிங்கலை என்றும் சுழுமுனை என்பது சுழுமுனா என்றுமாயிற்று.

உந்தி முதலாகக் கொண்டெழுந்து உடலின் உறுப்புகளை இயங்குவதற்காகத் தோன்றிய நரம்புகள், மயிர்க்கால், சதை, குருதி நாளம், கை, கால், வயிறு, குடல், எருவாய், கருவாய், தமரகம், நுரையீரல் கழுத்து, வாய், நாக்கு, மூக்கு, கண், செவி முதலியவைகளை இயங்கச் செய்தற்கு வீணாதண்டின் (Spine & Saerim & Coeyx) அடியிலிருந்து மேல் நோக்கி மண்டை வரை சென்று பந்தித்திருக்கினும் இயங்க வைக்கும் நிலை மூளையில் உள்ளது.

ஐம்பொருள்களில் காற்று ஒன்றே இயற்கையாக எல்லாப் பொருள்களையும் இயக்கும் தன்மையுடையதால் உடலில் அமைந்த எல்லா உறுப்புகளையும் இயக்கும் தன்மையுடைய நரம்புக் கூட்டங்களை(NERVE PLEXES) சித்த மருத்துவர் கால் (வாயு) எனக் கொண்டனர் போலும்.

- சித்த மருத்துவம்,
டாக்டர் க. நா. குப்புசாமி முதலியார்,
டாக்டர். சி. எஸ்.உத்தம ராயன்,
அரசினர் பதிப்பு, சென்னை.



## பத்து நாடிகள்

| | | |
|---|---|---|
| 1. இடகலை | - | வலது பெருவிரல் முதல் இடது மூக்கு வரை செயல்படுகிறது |
| 2. பிங்கலை | - | இடது பெருவிரல் முதல் வலது மூக்கு வரை செயல்படுகிறது. |
| 3. சுழி முனை | - | நடு நாடியாகத் தலை வரை நிற்பது |
| 4. சிகுவை | - | உள்நாக்கிலிருந்து சோறு, நீர் இவைகளை விழுங்கச் செய்வது. |
| 5. புருடன் | - | வலது கண் அளவாக உள்ளது. |
| 6. காந்தாரி | - | இடது கண் அளவாக உள்ளது. |
| 7. அத்தி | - | வலது காது அளவாக உள்ளது. |
| 8. அலம்புடை | - | இடது காது அளவாக உள்ளது. |
| 9. சங்கினி | - | குறியலவாய் இருப்பது. |
| 10. குகு | - | அபானத்தின் அளவாய் நிற்பது |

## சித்தரின் காயகற்ப மூலிகைகள்

| | |
|---|---|
| கருநெல்லி | கருநொச்சி |
| குவாழை | மதன தண்டு |
| கருவிவி | மூலிகைக் கொழுந்து |
| கரிசாலை | கிளி மூக்கு |
| கருநீலி | சிந்து |
| கரு ஊமத்தை | கரு வேம்பு |
| சர்க்கரைக்கோவை | செந்திராய் |
| கருந்தும்பை | செங்கல்லி |
| செம்பல்லிப்பூடு | செங்கற்றாழை |
| சிவந்த சித்திர மூலம் | சிவப்பு அமர வண்ண சாலி |
| பொன் ஊமத்தை | பொற் சீந்தில் |

| | |
|---|---|
| வெண் தராய் | வெண் தூதுவளை |
| வெண் நீர் முள்ளி | வெள்ளை விட்ணு கிரந்தி |
| வெண் கண்டங்கத்திரி | வெண்துத்தி |
| தீபசோதி | தீரண சோதி |
| சாயா விருட்சம் | உரோம விருட்சம் |
| எருமைக் கனச்சான் | சுணங்க விருட்சம் |
| கல் பிறம்பி | கல் சேம்பு |
| கல் தாமரை | குழலாதண்டை |
| கரும்பசலை | சர்க்கரை வம்பு |

- 44 வகைகள்,
போகர்.

## காய சித்தி மூலிகைகள்

| | |
|---|---|
| போய்ச்சுரை | பொற் சீந்தில் |
| விழுதி இலைக் கிழங்கு | கருநெல்லி |
| சர்க்கரை வேம்பு | கஞ்சா |
| கருப்பு சித்திர மூலம் | நூறு கரந்தை |
| வெள்ளைப் பூ | நாக தாளி |
| தூதுவளை | மால்தேவி விரை |
| பேய்க்கடலை | |
| கருமருது | |
| கரு சிற்றகத்தி | |

**15 வகைகள்**

***-காய கற்பம்,***
***அனுப்பம்பட்டி - பி. எஸ். மணியன்,***
***ஸ்ரீ வித்யா பப்ளிகேஷன்ஸ்,***
***விசாலம் பிரிண்டிங் பிரஸ்,***
***சென்னை - 1986.***

# சித்தர்கள் பயன்படுத்திய தனி மூலிகைகள்

| | |
|---|---|
| 1. திருமூலர் | கரிசாலை |
| 2. பத்தர் | குமரி |
| 3. காலாங்கி | கரந்தை |
| 4. அண்ட நாதர் | ஓமம் |
| 5. கோரக்கர் | கஞ்சா |
| 6. சிவயோகி | கரிசாலை |
| 7. வாம முனி | செருப்படை |
| 8. கஞ்சமலை | சித்தர் கருநீலி |
| 9. கொங்கணர் | பொற்றலைக்கையான் |
| 10. பதஞ்சலி | செருப்படை |
| 11. போகர் | கொல்லங்கோவை |
| 12. மச்ச முனி | வல்லாரை |

-காயகற்பம்,
அனுப்பம்பட்டி - ப. சு. மணியன்,
ஸ்ரீ வித்யா பப்ளிகேஷன்ஸ்,
விசாலம் பிரிண்டிங் பிரஸ்,
சென்னை - 1986

## கோரக்கர் மலைவாகடத்தில் உள்ள தாவரங்கள்

1. செவ்வாழை
2. சிவப்பு இலைக்கள்ளி
3. நெல்லி
4. வேலிப்பருத்தி
5. துத்தி
6. செந்நாயுருவி
7. சோதிப்புல்
8. சத்திரப்பூண்டு
9. பொற்றலைக் கரிப்பான்
10. செங்கொடிவேலி
11. பாற்சொரி
12. ஆலமரம்
13. செவ்வள்ளி
14. பலுனி மரம்
15. செங்குமரி
16. கருங்கரிப்பான்
17. சிவந்த தும்பை
18. வெண் நாவல்
19. கருந்தாமரை
20. கார்போக அரிசி
21. வல்லாரை
22. கானற் பலாவிரை
23. கரிப்பான்
24. பேய்ச்சுரை
25. கல்தாமரை
26. சிவந்த புனல் முருங்கை
27. முண்டக விருட்சம்
28. அவுரி
29. குமரிக்கற்றாழை
30. ஏரழிஞ்சல்
31. மஞ்சள் பூதைவேளை
32. நாகதாலி
33. அழுகண்ணி
34. தொழுகண்ணி
35. எருமை விருட்சம்
36. தில்லை விருட்சம்
37. சதுர மரம்
38. தும்புலா மரம்
39. காட்டாமணக்கும்மரம்
40. அருநெல்லி மரம்
41. ஆச்சா மரம்
42. சரள தேவதாரு
43. சோதி விருட்சம்
44. கருவாழை
45. கருஊமத்தை
46. மலையரளி மரம்
47. எட்டி மரம்
48. வெள்ளெருக்கு
49. சிவப்பு கீழ்காய் நெல்லி
50. குங்கிலிய மரம்
51. தான்றி மரம்
52. காயா மரம்
53. சிவந்த தூது வேளை
54. செங்கரிப்பான்
55. வெள்ளை வேம்பு
56. வன்னி மரம்
57. மருத மரம்
58. இரத்த பலாசு
59. நீல கண்டி விருட்சம்
60. கீரி விருட்சம்
61. தேவதாரு விருட்சம்
62. இந்திர வீர மரம்
63. வேம்பு மேல் புல்லுருவி
64. கல்லத்தி
65. குருக்கத்தி
66. சேங்கொட்டை

67. சீந்தில்
68. வேர்ப்பலா
69. கருங்கொடி வேலி
70. கருந்துத்தி
71. செந்தகரை
72. செங்கடுக்காய்
73. வெள்ளைப்புனல்முருங்கை
74. குருவரி கற்றாழை
75. மஞ்சள் பூதைவேளை
76. அமுதவல்லி
77. உரோம விருட்சம்
78. கருநெல்லி
79. நாகப்பட கற்றாழை
80. வனப்பிரமி
81. முப்பிரண்டை
82. சாயாவிருட்சம்
83. செந்தாடுபாவை
84. சஞ்சீவி மூலிகை
85. உரோம வேங்கைமரம்
86. இருப்பவல் செடி
87. பவளத்துத்தி செடி
88. உதிர வேங்கை
89. கருநொச்சி
90. கருநாரத்தை
91. சொமவிருட்சம்
92. பாற்பட்டை மரம்
93. அகில் மரம்
94. பாதிரி மரம்
95. கடுக்காய் மரம்
96. தேற்றா மரம்
97. சுரபுன்னை மரம்
98. கல் தாமரை
99. முண்டக விருட்சம்
100. சுணங்க விருட்சம்
101. வசுவாசி மரம்
102. கூமா மரம்
103. கூட்டப் பிராமரம்
104. வெள்ளை கண்டங்கத்திரி
105. கருமருது மரம்
106. சிறியா நங்கை
107. ஆயில்ய மரம்
108. மயிலை மரம்
109. பிராய் மரம்
110. கேந்திர வல்லிக்கொடி
111. கெட்டிலஞ்சி மரம்
112. கொஞ்சி மரம்
113. தொனியா மரம்
114. பிரமதரு, கருவாச்சி மரம்
115. ஊக்குணா மரம்
116. கைவளாக்கை மரம்
117. கணை விருட்சம்
118. திருகு கள்லி
119. மிளகரணைச் செடி
120. கருடக் கொடி
121. வஞ்சிக்கொடி
122. நேத்திரஞ்சிமிட்டிசெடி
123. சிவனார் வேம்பு
124. வெள்ளைநீர்முள்ளிச்செடி
125. ஓரிலைத் தாமரை
126. பூமிச் சர்க்கரைக்கிழங்கு
127. பயற்றங்காய்
128. ஆடுதின்னாப்பாளை கொடி
129. ஆடாதோடை
130. புளியம் பிரண்டை
131. சீதா செங்கழு நீர்க்கொடி

- இராம. குருசாமிக்கோனார் சன்,
ஸ்ரீ இராமச்சந்திர விலாசம் பிரஸ்,
1940.

# காலங்கிநாதர் கூரும் மூலிகைகள்

1. கருநீலி
2. கருவீழி
3. கருங்கையன்
4. கரு உமத்தை
5. சர்க்கரை கோவை
6. குழாதண்டை
7. செங்கொடிவேலி
8. சிவப்பு தில்லை
9. சுணங்க விருட்சம்
10. சோதி விருட்சம்
11. சாயா விருட்சம்
12. இலையுதிரா விருட்சம்
13. பெரியா நங்கை
14. செந்நாயுருவி
15. பேய்க்கடலை
16. செம்பூத விருட்சம்
17. ஏறு சிங்கி
18. கரு நொச்சி
19. கருநெல்லி
20. பொன்நிற சாலி
21. செங்குமரி
22. கல்தாமரை
23. செந்தராய்
24. செந்தாடு பாவை
25. சிவப்பு கீழாநெல்லி
26. கல்பிரமி
27. கரும்பசலை
28. கருவாழை
29. சர்க்கரை வேம்பு
30. கரும்பூத விருட்சம்
31. சிறியா நங்கை
32. மயூர சிகை
33. வெண் கரந்தை
34. வெள்ளைப்பூ துத்தி
35. வெள்ளைப் புரசு
36. வெள்ளைக் கண்டங்கத்திரி
37. வெல்ளை ஆவாரை
38. பொன்ஊமத்தை
39. மூலிகைக் குருத்து
40. கொக்கு மந்தாரை
41. அழுகண்ணி
42. தொழுகண்ணி
43. பேய் தேற்ரான்
44. கற்பூரவில்வம்
45. கல் சேம்பு
46. மூவாட்டுக்கால்
47. செந்தும்பை
48. முப்பிரண்டை
49. உரோம விருட்சம்
50. சடை விருட்சம்
51. இரச காந்த விருட்சம்
52. சரள தேவதாரு
53. முண்டக விருட்சம்
54. சோதிப்புல்
55. கன எருமை விருட்சம்
56. நத்தை சூரி
57. நாக நந்த விருட்சம்
58. நாக தாளி
59. கற்பூர வல்லி
60. கருடக் கொடி
61. பொற் சீந்தில்
62. இந்திர நீலம்
63. கருந்துளசி

-மரணம் மாற்றும் மூலிகைகள்
என். பால குருசாமி,
கந்தர் பப்ளிகேஷன்ஸ்,
சென்னை, 1987

## கருவூர் சித்தர்
## வாத காவியம் 700 இல் மூலிகைகள்

பொன்னாங்கண்ணி தகரை ஆரைக் குற்பம்
புருடர் வயதாயிரமாம்
சொன்ன மதியமாம் சிறியா நங்கை
சோதி விருட்சமப்பா

காநப்பிலாத்தைலம் பேய்ச்சுரை
கழுக்காய் சுக்கு இஞ்சியதாம்
தேனது மாங்கனியில்
தைலம் தேவதாளி மரமும்

சாதியின் கந்தகமும் சூதம்
சரியான நாகமுடன்
ஆதி அரிாரம் செந்தூரம்
ஆக்கியுண்டால் கோடியுகம்

கோங்கு விட்ணு பூபதியும் நாகமல்லி
குமரி அம்மான் சீந்தியுடன்
வேங்கை ரோம விருட்சம் நல்ல
வியப்பான சோதிப் புல்லும்.

உரை : பொன்னாங்கண்ணி, தகரை, ஆரை, இக்கற்பங்களை உண்ண, வயது ஆயிரம் வரை உயிர் வாழலாம். சிறியா நங்கை, சோதி விருட்சம், கானப் பலாத்தைலம் பேய்ச்சுரை கடுக்காய், சுக்கு, இஞ்சி, இனிய மாங்கனித் தைலம். தேவதார மரம், கந்தகம், இரசம், நாகம், தாளகம் வகையிலான செந்தூரம் உண்ணக் கோடி ஆண்டுகள் வாழலாம். தென்னை, விட்ணு பூபதி மாத்திரை, நாகமல்லி, கற்றாழை, அம்மான் பச்சரிசி, சீந்தில் வேங்கை, உரோம விருட்சம், சோதிப்புல்.

சாயா விருட்ச மதில் தேவரம்பை
தானே உலவுவர்கள்
மாயாதி விந்தையப்பா கருநெல்லி
வளரும் வெள்ளைச் சாரணையும்

நார் கரந்தை ஆவாரையும் வெள்ளை
நாவல் சுணங்கு மரம்
பேர் பெருகு தில்லையப்பா நல்ல
பிரியமொடு செண்பகப்பூ

எருமைக் கனைச்சான் விருட்சம்
செங்கொடுப்பையிலை தும்பி பேய்ப்பீர்க்கு
ஒரு மாமர விதையாயாச் சேர்த்து
உயர்ந்த தைலமிறக்கிச்

செங்கொடி வேலியுடன் அவுரி
சிறந்த உகாமரமும்
பொங்கும் சதுரகிரி தன்னில்
பொருந்தியே தானிருக்கும்

ஆதிமுதல் சொன்னை இலை
சடமழியாத மூலியது
நீதியுடன் போயிருந்து இதை
நேயமுடன் கொண்டு வந்து

காந்தமொடு கந்தகத்தைப் பற்பம்
கணக்கைகவே முடித்து
சாந்தமுடன் அதையும் சேர்த்து
சாப்பிடச் சிந்தியதாம்

காக்கைக் கரிச்சானும் செந்தலை
கருடன் கழுகதுவில்
நாக்கு தனை எடுத்து வத்திரகாயம்
நன்றாகச் செய்தொரு மா

மண்டலந்தேனில் கொள்ள
தேகம் வச்சிர காயம்தாம்
விண்டுந்ன் சொல்லிவிட்டேன்
மேதினியில் சொல்லாதே

- கருவூரார் வாத காவியம் 700

உரை : சாயா விருட்சம் என்ற மரத்தில் தெய்வீகம் உள்ள பெண்கள் தங்குவார்கள். கருநெல்லி, வெள்ளைச்சாரணை, கரந்தை, ஆவாரை, வெண் நாவல், சுணங்க மரம், தில்லை, செண்பகப்பூ, எருமைக் கனைச்சான் விருட்சம், செங் கொடுப்பை இலை தும்பை, பேய்ப்பீர்க்கு, மாங்கொட்டை இவற்றைச் சேர்த்துத் தைலமிறக்கிக் கொல்லவும். செங்கொட்டை வேலி, அவுரி, உகாய் மரம் உள்ள சதுர கிரி மலையில், உடலை அழியாமல் காக்கும். இவற்றை மலையிலிருந்து கொண்டு வந்து, காந்த பற்பம், கந்தக பற்பமுடன் கூட்டி உண்ணவும்.



## கொல்லி மலையில் உள்ள மூலிகைகள்

1. அசோகா
2. அதிமதுரம்
3. அமுக்ரா
4. அரளி
5. அறுகம்புல்
6. அழுகண்ணி
7. ஆகாச கருடன்
8. ஆகாய காய்சசி
9. ஆதொண்டை
10. ஆடாதொடை
11. இஞ்சி
12. இலவங்கம்
13. ஈச்சரமூலி
14. உத்திராட்சம்
15. ஊமத்தை
16. எட்டி
17. எருக்கு
18. ஏலம்
19. ஓமம்
20. ஓரிதழ்த்தாமரை
21. கசகசா
22. கடுகு
23. கடுக்காய்
24. கரிசாலை
25. கருமிலகு
26. கலப்பைக் கிழங்கு
27. கழற்சி
28. கன்னிக் கூந்தல்
29. கஸ்தூரி மஞ்சள்
30. காட்டு இஞ்சி
31. ஒடுவன்
32. காட்டுக் கருணை
33. காட்டுக் கொடி
34. கடுக்காய் (மஞ்சள்)
35. காட்டுப் புடல்
36. கார்போகி
37. கிராம்பு
38. கீர்த்தி
39. கீழாநெல்லி
40. குடசப்பாலை
41. குருமத்தை
42. குருவேர்
43. குன்றிமணி
44. கூவைக் கிழங்கு
45. கொத்துப்பாலை
46. கோடைப்புளி
47. சங்கங் குப்பி
48. சங்கு புட்பம்
49. சண்பகம்
50. சந்தனம்
51. சாதிக்காய்
52. சிற்றரத்தை
53. சித்திர மூலம்
54. சிவனார் வேம்பு
55. சிறியா நங்கை
56. சிறு குறிஞ்சா
57. சிறு பாகல் வல்லி
58. சீந்தில் கொடி
59. சீரகம்
60. செஞ்சந்தனம்
61. செவ்வல்லிக் கொடி
62. சென்னா (நிலவாகை)
63. தண்ணீர் விட்டான் கிழங்கு
64. தான்றிக்காய்
65. திப்பிலி
66. திருகு கள்ளி
67. திருநாகப்பூ
68. திரு நாமப்பாலை

69. தும்புரு
70. தும்பை
71. துளசி
72. தேக்கு
73. தொழு கண்ணி
74. நத்தை சூரி
75. நன்னாரி
76. நாககேசுரம்
77. நாகமல்லி
78. நாக பூத்தாளி
79. நாயுருவி
80. நிலப்பனை
81. நுலம்பாணல்
82. நெருஞ்சில்
83. நெல்லி
84. பலா
85. பிரண்டை
86. பீநாறி
87. புங்கு
88. பூமி சர்க்கரைக்கிழுங்கு
89. பெரியா நஹ்றகை
90. பெரும் பிரண்டை
91. பேன் கொட்டை
92. பொன் குதண்டி
93. பொன் முசுட்டை
94. மக்கிப்பால்
95. மஞ்சள் கரிசாலை
96. மதன காமம்
97. மாகாளிக் கிழங்கு
98. மாசிக்காய்
99. மிளகரணை
100. முக்கரட்டை
101. மூங்கில்
102. வசம்பு
103. வலம்புரி
104. வாய்விளங்கம்
105. வால்மிலகு
106. வாலுளுநவை
107. விராலி
108. வில்வம்
109. விட்ணு கிரந்தி
110. வெட்டிவேர்
111. வெந்தயம்
112. வெள்ளை பூத்தாளி
113. வெற்றிலை
114. வள்ளி
115. வேங்கை
116. வேம்பு
117. வேலிப்பருத்தி

சேலம் மாவட்டம்
சில ஆய்வுகள்
தொகுப்பு:
தமிழ்நாடன், பெங்களூர்,
நோவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்
சென்னை, 1988



# மூலிகை மர்மத்திலுள்ள தாவர வகைகள் அட்டவணை

1. அக்ரஹாரம்
2. அதிவிடையம்
3. அதிமதுரம்
4. ஆவாரை
5. ஆடாதோடை
6. ஆடுதின்னாப் பாளை
7. ஆதளை
8. இம்பூரல்
9. இஞ்சி
10. எட்டி
11. எலுமிச்சை
12. ஏலம்
13. கரிசாலை
14. கரந்தை
15. கற்பூரவல்லி
16. கருங்காலி
17. கருஞ்சீரகம்
18. கடுக்காய்
19. கடுகுரோகிணி
20. கற்கடக சிங்கி
21. கறிவேப்பிலை
22. கார்போக அரிசி
23. கரிவேப்பிலை
24. குப்பைமேனி
25. குங்குமப்பூ
26. குங்கிலியம்
27. கூகை நீர்
28. கொல்லங்கோவை
29. கொடிவேலி
30. கோட்டம்
31. சங்குப்பி
32. சதகுப்பை
33. சடாமாஞ்சில்
34. சித்திர மூலம்
35. சிவனார் வேம்பு
36. சிறுநாகப்பூ
37. சிறுவாலுளுவை அரிசி
38. சிந்தில்
39. சீரகம்
40. சுக்கு
41. செவ்வியம்
42. செங்கழுநீர்
43. சேங்கோட்டை
44. வல்லாரை
45. வசம்பு
46. வாலுளுவை அரிசி
47. வாய்விலங்கம்
48. வெட்சி
49. வெட்டிவேர்
50. வெந்தயம்
51. வேலிப் பருத்தி
52. வேம்பு
53. தழதாழை
54. தான்றிக்காய்
55. தாளிச பத்திரி
56. திப்பிலி
57. திப்பிலி மூலம்
58. தும்பை
59. மருள்
60. மஞ்சட்டி
61. மலைவேம்பு
62. மிளகு
63. மிளகு தக்காளி
64. முந்திரி
65. முட்கா வேளை
66. முத்தக்காசு
67. முடக்கொத்தான்
68. நன்நாரி
69. நாரத்தை
70. நாவல்71. நிலவேம்பு
72. நிலவாரை
73. நீர்மபள்ளி
74. நீர்குண்டி
75. நெல்லிக்காய்

1. உன்னம் வயிற்று நோய் நீங்கும்

2. பொஞ்சி செரியாமை நோய் தீர்க்கும்

3. குறுந் தொட்டி வேர் வயிற்றுக் கடுப்பு தீர்க்கும்

அனுபவத்தால் கண்ட மூலிகைகளின் மூலம் நிறைவு செய்து கொள்ளுகின்றனர் நீலாம்பூர் காடுகளில் வாழும் பழங்குடிகளான சொலை நாயகன்மார் தற்காலிகக் குடும்பக்கட்டுப்பாடு மூலிகைகளை அறிந்துள்ளனரா'' குரிசியர் எனஅனும் பழங்குடிகள் 108 வகை மூலிகைகளை அறிந்தவர்களாம். மலை வேடர்கள் சிறு நீரையும் மருந்தாகக் பயன்படுத்துகின்றனராம்.

கஞ்சாப் புகைக்குப் பாம்புகள் அண்டுவதில்லையாம். இம்மருந்து 'காடன்' மருந்து எனப்படுகின்றது.

-இடுக்கி மாவட்டப் பழங்குடி வழக்காற்றியல்

"அப்பா குமர கோட்டடக் கீரை செவ்விவிலி
மோட்டு பாகற்காய் பருத்திக் குளநீர்-செப்புவா
சாற்கீர்றும் கம்பத்தடியில் தவங்கருமாரிப்
பாய்ச்சல் பார்க்கும் இனிது"

-காளமேகம்

குமர கோட்டத்துக் கீரை, செவ்விலி மேட்டுப் பாகல், பருத்திக் குளநீர் என்பன இனியவையாகும்.



# துணை நூற்பட்டியல்

1. போகர் நிகண்டு 12300 - இரத்தின நாயகர் சன்ஸ், சென்னை.

2. காய கற்பம் - டி. எஸ். மணியன், சென்னை.

3. கோரக்கர் மலை வாகடம் - இராமசாமிக்கோன், மதுரை.

4. மரணம் மாற்றும் மூலிகைகள் - பால குருசாமி, சுந்தர் பப்ளிகே ஷன்ஸ், 1987.

5. வாத காவியம் 700 - கருவூர் சித்தர்.

6. சித்த மருத்துவம் டாக்டர் ச. ஆறுமுகநாதன், சண்முகானந்தா புத்தகசாலை, சென்னை.

7. விஷ வைத்திய சிந்தாமணி, சிறுமணவூர் முனுசாமி முதலியார், திருமகள் விலாச அச்சகம், சென்னை.

8. சேலம் மாவட்டம் சில ஆய்வுகள், தமிழ்நாடன், காவியா, 1988.

9. இடுக்கி மாவட்டப் பழங்குடி வழக்காற்றியல், டாக்டர் பீ. நசீம்தீன், அகரம், சிவகங்கை, 1989.

10. அகத்தியர் வைத்திய சில்லரைக்கோவை, நா. சிதம்பர முதலியார் பதிப்பு.

11. 18 சித்தர்கள் நாடி சாத்திரம் - இரத்தின நாயகர் சன்ஸ், சென்னை.

12. விஷ வைத்திய சிந்தாமணி, சிறுமணவூர் முனுசாமி முதலியார், திருமகள் விலாச அச்சகம், சென்னை-1

13. Hand Book of Siddha Medicine T. G. Ramamoorthy Iyar, Asian Studies, New Delhi.

